**பதவுரை:–** **ய:** – யாவரொருவர், **யதிபதி ப்ரஸாதி3நீம்** – யதிராஜரான எம்பெருமானாரை அருள் செய்யும்படி பண்ணுமதான, **யதிராஜவிம்ஶதிம்** – அந்த யதிராஜர் விஷயமான இருபது ஶ்லோகங்களைக் கொண்டதாகையால் யதிராஜவிம்ஶதி என்னும் பெயருடையதாகிய, **ஸ்துதிம்** – ஸ்தோத்ரத்தை, **வ்யாஜஹார** – அருளிச்செய்தாரோ, **ப்ரபந்நஜந சாதக அம்பு3த3ம்** – ப்ரபந்ந ஜநங்களாகிய சாதக பக்ஷிகளுக்கு நீரையுதவும் மேக4ம் போன்றவரான, **தம் ஸௌம்யவர யோகி3புங்க3வம்** – அந்த அழகியமணவாளரென்னும் பெயர்கொண்ட முநிஶ்ரேஷ்டரை (அழகியமணவாளமாமுனிகளை), **நௌமி** – துதிசெய்கிறேன்.

**கருத்துரை:–** இத்தனியன் எறும்பியப்பா அருளிச்செய்தது. யதிபதி ப்ரஸாதி3நீ – இந்த யதிராஜவிம்ஶதி என்ற ஸ்தோத்ரமானது தன்னை அநுஸந்தி4ப்பவர்கள் விஷயத்தில் யதிபதியான எம்பெருமானாரை அருள் செய்தல்லது நிற்கவொண்ணாதபடி பண்ணவல்லதென்றபடி. ப்ரபந்நஜநசாதக அம்பு3த3:–சாதகப்பறவைக்கு (வானம்பாடிக்கு) உயிர்காக்கும் நீரைப்பொழியுமதான மேக4ம் போன்றவர். ப்ரபந்நஜநங்களுக்கு மோக்ஷமளித்து உயிர்காக்கும் எம்பெருமானார் என்பது இதன் கருத்து. யோகி3புங்க3வ: – முனிவர்பெருமான் – மஹாமுனிகள்.

**நூல்**

श्रीमाधवाङ्घ्रिजलजद्वयनित्यसेवाप्रेमाविलाशयपराङ्कुशपादभक्तम् ।
कामादिदोषहरमात्मपदाश्रितानां रामानुजं यतिपतिं प्रणमामि मूर्ध्ना ॥ १

ஸ்ரீமாத4வாங்க்4ரி ஜலஜத்3வய நித்யஸேவா ப்ரேமாவிலாஶய பராங்குஶ பாத3ப4க்தம்।
காமாதி3தோ3ஷஹரம் ஆத்மபதா3ஶ்ரிதாநாம் ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமி மூர்த்4நா॥ 1

**பதவுரை:– ஸ்ரீமாத4வ அங்க்4ரி ஜலஜத்3வய** – எல்லாவற்றாலுமுண்டான பெருமையை உடையவளான ஸ்ரீமஹாலக்ஷ்மி போன்றவனாகிய திருவின்மணாளனுடைய தாமரைமலர் போன்ற திருவடியிணையில் செய்யத்தக்க, **நித்யஸேவா – ப்ரேம ஆவில ஆஶய** – நித்ய கைங்கர்யத்தில் அதி4க ப்ரீதியாலே கலங்கிய அறிவையுடைய, **பராங்குஶ பாத3ப4க்தம்** – பராங்குஶரென்னும் நம்மாழ்வாருடைய திருவடிகளில் பரமப4க்தி பூண்டவரும், **ஆத்மபத3 ஆஶ்ரிதாநாம்** – தம்முடைய திருவடிகளை அடைந்தவர்களுடைய, **காம ஆதி3 தோ3ஷஹரம்** – காமம் முதலிய குற்றங்களைப் போக்கடிப்பவரும், **யதிபதிம்** – பொறிகளை யடக்கிய துறவிகளுக்குத் தலைவருமான, **ராமாநுஜம்** – ராமாநுஜரென்னும் எம்பெருமானாரை, **மூர்த்4நா** – தலையால், **ப்ரணமாமி** – வணங்குகிறேன்.

**கருத்துரை:–** ஸ்ரீ என்பது மாத4வனுக்கு விஶேஷணமாகும். ஸ்ரீ போன்ற மாதவனென்பது இதன் பொருள். ஸ்ரீ: என்றது பெரியபிராட்டியாரை. அழகு நறுமணம் மென்மை முதலிய தே3ஹகு3ணங்களென்ன, பேரன்பு, நீர்மை, எளிமை முதலான ஆத்மகு3ணங்களென்ன, அவற்றிலும் சிறந்த அடியாரைக் காப்பதில் திடமான விரதம்

பூணுதலென்ன இவை தொடக்கமான பெருமைகளாலே பெரியபிராட்டியாரை ஒத்தவன் அவளுடைய மணவாளனாகிய எம்பெருமானென்பது இதன் திரண்ட பொருள். இங்ஙனன்றிக்கே, ஸ்ரீயினுடைய – மாத$_4$வன் திருவடிகள் என்று அந்வயித்து, பிராட்டி நித்யவாஸம் செய்யும் எம்பெருமான் திருவடிகளென்றலும் உண்டு. அப்போது, பிராட்டி எழுந்தருளியிருக்கிற பெருமான் திருவடிகளென்றதாய்க் கொண்டு, ''ஸ்ரீமந்தௌ ஹரிசரணௌ ஸமாஶ்ரிதோSஹம்'' (பிராட்டியோடு நித்யஸம்ப$_3$ந்த$_4$ம் பெற்ற ஹரியின் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றினேன் அடியேன்) (ஸுந்த$_3$ர. ஸ்த.1) என்று கூரத்தாழ்வான் அருளிச்செய்த படியே மேலக்கோட்டையில் போலே பிராட்டியோடு கூடிய பெருமாள் திருவடிகளைச் சொல்லிற்றாகக் கொள்க. கண்ணபிரானுக்குத் தொண்டுசெய்யவேணுமென்று மிகவும் ஆசைப்பட்ட நம்மாழ்வார், அவன் வந்து முக$_2$ங்காட்டும் வரையில் பொறுத்திருக்க வேண்டிய தம்முடைய பாரதந்த்ர்யத்துக்கு முரண்பட்டதாகிய மடலூர்தலில் மூளும்படி மதிகலங்கப்பெற்றதைத் திருவுள்ளத்திற்கொண்டு 'மாத$_4$வாங்க்$_4$ரி ஜலஜத்$_3$வய நித்யஸேவா ப்ரேமாவிலாஶய பராங்குஶ' என்றருளிச்செய்தார். அத்தகைய நம்மாழ்வாரின் திருவடிகளில் ப$_4$க்திகொண்டவர் எம்பெருமானார். 'மாறனடி பணிந்துய்ந்தவன் – இராமாநுசன்' என்றாரிறே அமுதனாரும். அவரை அடியொற்றியிறே 'பராங்குஶபாத$_3$ ப$_4$க்தம் ராமாநுஜம்' என்று இவரருளிச்செய்ததும். பரருக்கு – வேத$_3$த்தை ப்ரமாணமாக அங்கீ$_3$கரியாத ஜைநபௌ$_3$ளத்$_3$த$_4$ாதி$_3$களென்ன, வேத$_3$த்துக்கு அவப்பொருள் சொல்லும் அத்$_3$வைதவாதி$_3$களென்ன இவர்களாகிய – புறமதத்தவராகிய யானைகளுக்கு. அவர்களை அடக்கவல்ல அங்குஶம் போன்றிருத்தலால் நம்மாழ்வார் பராங்குஶர் எனப்பட்டாரென்க. 'ஒன்றும் தேவும்' (திருவாய் 4–10) பதிகத்தில் ஆழ்வார் முற்கூறப்பட்டவர்களை அடக்கியது அதன் வ்யாக்$_2$யானங்களை ஸேவித்து அறியத்தக்கது.

(ராமாநுஜர்) ராமபிரானுடைய தம்பியான லக்ஷ்மணனுடைய அவதாரமாகையாலே, எம்பெருமானார் ராமாநுஜரென்ற பெயரைப்பெற்றார். அபி$_4$நவ தஶாவதாரங்களாகச் சொல்லப்படுகிற ஆழ்வார் பதின்மரில், இராமாவதாரமாக ப்ரஸித்$_3$த$_4$ராகிய நம்மாழ்வாரிடம் லக்ஷ்மணனுடைய அவதாரமாகிய இராமாநுசருக்குப் பரமப$_4$க்தி இருப்பது மிகவும் பொருத்தமென்கிறார் வ்யாக்$_2$யாதா திருமழிசை அண்ணாவப்பங்கார்ஸ்வாமி. மேலும் அவர் – எம்பெருமானார் தாம் மனம் முதலிய பொறிகளையடக்கிய ஸந்யாஸிகட்குத் தலைவராகையாலே, தம்மையடைந்தவர்களுடைய மனத்தில் உண்டாகும் காமம், கோபம், உலோபம், திரிபுணர்ச்சி, செருக்கு, பொறாமை முதலிய குற்றங்களைப் போக்குமாற்றல் படைத்தவர் என்கிறார். தம்மனத்தை அடக்கியபெருமை படைத்தவர்க்கன்றோ பிறர் மனத்தின்கண் உண்டாகும் குற்றங்களைக் களையுமாற்றல் உண்டாவது என்பது கருத்தாகும். மாத$_4$வன் திருவடிகளுக்குப் புதுமணம் புதுமலர்ச்சி மென்மை முதலிய கு$_3$ணங்களைக் கொண்ட தாமரைமலர்களோடு ஒப்புமை கூறப்பட்டதால் அக்கு$_3$ணங்கள் திருவடிகளில் உள்ளமை தோன்றுவதன் வாயிலாக– மாத$_4$வன் திருவடிகளில் பராங்குஶருக்கு ஏற்பட்ட ப$_4$க்தி கு$_3$ணங்களுள்ளமையினாலென்

பதும், பராங்குஶரின் திருவடிகளுக்குத் தாமரைகளோடு ஒப்புமை கூருமையினுல் அத்திருவடிகளில் இராமாநுசருக்கு ஏற்பட்ட ப$_4$க்தி, கு$_3$ணங்களுள்ளமையினுலல்லாமல் 'ஆசார்யன் திருவடிகளில் ஶிஷ்யனுக்கு ஶிஷ்யஸ்வரூபமடியாகவே ப$_4$க்தியுண்டாக வேணும்' என்ற நியதிப்படி இயற்கையாகவே அமைந்ததென்பதும் இங்குக் கருதத்தக்க தாகும். கு$_3$ணத்தினுலுண்டான ப$_4$க$_3$வத்ப$_4$க்தியைக் காட்டிலும் இயற்கையாகவே உண்டா கிய ஆசார்யப$_4$க்தி சிறந்ததென்னும் ஶாஸ்த்ரார்த்த$_2$ம் இதனுல் ஶிக்ஷிக்கப்பட்ட தாகிறது.

எம்பெருமானுராகிய ஆசார்யரிடத்தில் ப$_4$க்தராய் ஸந்யாஸியான தமக்கு அவ்வெம்பெருமானுரிடத்தில் ப$_4$க்தி உண்டானதற்கு, அவர்தாமும் பராங்குஶராகிய ஆசார்யரிடத்தில் ப$_4$க்தியுடையவராய் ஸந்யாஸி ஶ்ரேஷ்ட$_2$ராயிருக்கையே காரணமென்பது தோன்றும்படி 'பராங்குசபாத$_3$ப$_4$க்தம் யதிபதிம் ராமாநுஜம்' என்று மாமுனிகள் எம்பெருமானுரை – பராங்குசபாத$_3$ப$_4$க்தரென்றும் யதிராஜரென்றும் சிறப்பித்தருளினுர். "யதீநாம் பதி: யதிபதி:". பதி: என்பதற்கு, இடுகுறிப்பெயராகுந் தன்மையினுல் ஶேஷி (அடிமையை ஏற்றுக்கொள்ளும் தலைவர்) என்றும், காரணப் பெயராகுந் தன்மையினுல் "பாதி (ரக்ஷிக்கிருர்) இதி பதி:" என்ற வ்யுத்பத்தியின் மூலம் ரக்ஷகர் என்றும் பொருள் தேறுகிறது. ஸந்யாஸிகட்கு ஶேஷியும் ரக்ஷகரும் எம்பெருமானுரென்னவே, ப்ராப்யரும் (கைங்கர்யத்தையேற்று மகிழுமவரும்) அவரே என்பது ஸித்$_3$தி$_4$த்ததாகி றது; திருமந்த்ரத்திலுள்ள மூன்று பத$_3$ங்களுக்கும் – ஆசார்யருடைய ஶேஷித்வமும், ரக்ஷகத்வமும், ப்ராப்யத்வமுமன்றே முடிந்த பொருளாவது. இத்தகைய பெருமைபெற்ற யதிராஜரை – யதிராஜ விம்ஶதியாகிய துதிநூல் இனிதே முடிவடைவதன் பொருட்டு வணங்கினுராயிற்று மாமுனிகள் இந்த ஶ்லோகத்தினுல்.(1)

श्रीरङ्गराजचरणाम्बुजराजहंसं श्रीमत्पराङ्कुशपदाम्बुजभृङ्गराजम्।
श्रीभट्टनाथपरकालमुकाब्जमित्रं श्रीवत्सचिह्नशरणं यतिराजमीडे ।। २

ஶ்ரீரங்க$_3$ராஜசரணம்பு$_3$ஜராஜஹம்ஸம் ஶ்ரீமத்பராங்குஶபத$_3$ாம்பு$_3$ஜப்$_4$ருங்க$_3$ராஜம்।
ஶ்ரீப$_4$ட்டநாத$_2$பரகாலமுகாப்$_3$ஜமித்ரம் ஶ்ரீவத்ஸசிஹ்நஶரணம் யதிராஜமீடே$_3$ ।। 2

**பதவுரை:–** **ஶ்ரீரங்க$_3$ராஜ சரணம்பு$_3$ஜ ராஜஹம்ஸம்** – ஶ்ரீரங்கநாதனுடைய திருவடிகளாகிய தாமரைமலர்களுக்கு (தாமரை மலர்களின் நிழலின் கீழே தங்கியிருக்கிற) ராஜஹம்ஸம் போன்றவரும், **ஶ்ரீமத்பராங்குஶ பத$_3$ாம்பு$_3$ஜ ப்$_4$ருங்கராஜம்** – ஶ்ரீமத்பராங்குஶராகிய நம்மாழ்வாருடைய திருவடிகளென்னும் தாமரைமலர்களில் (தேனைப்பருகுவதற்காகப்) படிந்திருக்கிற உயர்ந்த வண்டு போன்றவரும், **ஶ்ரீப$_4$ட்டநாத$_2$ பரகால முகாப்$_3$ஜ மித்ரம்** – ஶ்ரீப$_4$ட்டநாத$_2$ராகிய பெரியாழ்வாரென்ன, பரகாலராகிய திருமங்கையாழ்வாரென்ன ஆகியவர்களுடைய திருமுக$_2$ங்களாகிய தாமரைமலர்களை மலரச்செய்கிற ஸூர்யன் போன்றவரும், **ஶ்ரீவத்ஸசிஹ்ந ஶரணம்** – ஶ்ரீவத்ஸசிஹ்நராகிய கூரத்தாழ்வானைத் திருவடிகளாக உடையவருமாகிய, **யதிராஜம்** – யதிராஜராகிய

எம்பெருமானுரை, **ஈடே$_3$** – துதிக்கிறேன்.

**கருத்துரை:–** து$_3$ர்லபே$_4$ா மாநுஷோ தே$_3$ஹோ தே$_3$ஹிநாம் க்ஷணப$_4$ங்கு$_3$ர:। தத்ராபி து$_3$ர்லப$_4$ம் மந்யே வைகுண்ட$_2$ப்ரிய த$_3$ர்ஶநம்॥ (ஸ்ரீப$_4$ாக$_3$வதம் 11–2–29) [உயிர்களுக்கு, கணநேரத்தில் அழியக்கூடிய மனிதவுடல் கிடைப்பது அரிது, அது கிடைத்தபோதிலும் வைகுண்ட$_2$நாத$_2$னுடைய அன்புக்கு இலக்கான ப$_4$ாக$_3$வதர்களைக் காண்பது மிகவும் அரிது] என்கிறபடியே ப$_4$ாக$_3$வதர்களுடைய ஸேவையே அரியதானால் அவர்களுக்குக் கைங்கர்யம் செய்வது அரிதென்பதைத் தனியே சொல்லவும் வேண்டியதில்லையாகையால், ப$_4$ாக$_3$வத கைங்கர்யமாகிய யதிராஜவிம்ஶதியின் விண்ணப்பத்திற்குத் தடைகள் மிகமிக உண்டாகக் கூடுமென்று நினைத்து, அத்தடைகள் நீங்குவதற்காக மறுபடியும் தம்முடைய ஆசார்யநிஷ்டையாகிய தகுதிக்கேற்றபடி யதிராஜ-ஸ்தோத்ரரூபமான மற்றொரு மங்க$_3$ள ஶ்லோகத்தை இயற்றுகிறார் – ஸ்ரீரங்க$_3$ராஜ என்று தொடங்கி. இங்குள்ள ஸ்ரீஶப்$_3$த$_3$ம் ஸ்ரீவைகுண்ட$_2$மும் இவ்வுலகுமாகிய இருவகைச் செல்வங்களைக் காட்டுமதாய் அவற்றையுடையவன் ரங்க$_3$ராஜன் என்பதை அறிவிக்கிறது. அல்லது செம்மை மென்மை நறுமணமாகிய நற்பண்புகளைக் காட்டுமதாய் அவற்றை இயற்கையாகப்பெற்ற ஸ்ரீரங்க$_3$ராஜனுடைய திருவடித்தாமரைகளைத் தெரிவிக்கிறது. இதன்படி ஸ்ரீயை உடையன ரங்க$_3$ராஜ சரணாம்பு$_3$ஜங்கள் என்ற கருத்துத்தோன்றும். பராங்குஶரிடமுள்ள ஸ்ரீமத்த்வமாவது – எம்பெருமானை அநுப$_4$விப்பதும், அவனுக்குத் தொண்டு செய்வதும் அவற்றிற்கு உறுப்பான பரப$_4$க்தி பரஜ்ஞாந பரமப$_4$க்திகளுமாகிய – ஜீவாத்மஸ்வரூபத்திற்குத் தக்க செல்வங்கள் நிறைந்துள்ளமையே ஆகும். காணவேணுமென்று ஆசைப்படுகை பரபக்தி, கண்டபிறகு கூடவேணுமென்னுமாசை பரஜ்ஞாநம், கூடிய பிறகு பிரிவு நேருமோ என்று அச்சப்படுகை பரமபக்தி என்பர் பெரியோர். இவை மூன்றும் உணவுக்குப் பசி போலே ப$_4$க$_3$வதநுப$_4$வகைங்கர்யங்களுக்கு முன்பு இருக்கவேண்டுமாம். பசி இல்லையேல் உணவு ருசிக்காததுபோலே, இம்மூன்றும் இல்லையாகில் ப$_4$க$_3$வான் திறத்தில் நாம் செய்யும் அநுப$_4$வ-கைங்கர்யங்கள் ருசியாதன ஆகுமாம். ஆகவே ஆழ்வார்க்கு இம்மூன்றும், இவற்றின் பின்னே நிகழும் ப$_4$க$_3$வதநுப$_4$வ-கைங்கர்யங்களும் நிறைந்துள்ளமை இந்த ஸ்ரீமத் ஶப்$_3$த$_3$த்தினால் அறிவிக்கப்படுகின்றன என்றபடி. ஸ்ரீப$_4$ட்டநாத$_2$பரகால – ப$_4$ட்டநாத$_2$ரிடத்திலும், பரகாலரிடத்திலும் பொருந்துமதாய், முறையே பரம்பொருள் திருமாலே என்று அறுதியிட்டு அவனுக்குப் பல்லாண்டு பாடுகையாகிற செல்வத்தையும், புறச்சமயிகளை அடக்குதல், திருவரங்கம் பெரியகோயிலில் மதிள்கட்டுதல், எம்பெருமானைக் பூர்ணமாக அநுப$_4$விக்கவோ, பிரியவோ பொருத மென்மைத்தன்மை யாகிய செல்வங்களையும் குறிக்கிறது. இத்தகைய மென்மைத்தன்மையை 'நும்மடியாரெல்லாரோடும் ஒக்க எண்ணியிருத்தீர் அடியேனை' (பெரிய திரு.4–9–6) என்று தாமே விண்ணப்பம் செய்தாரிறே திருமங்கையாழ்வார் இந்தளூரிலெந்தை பெருமானிடம். 'ஸ்ரீவத்ஸசிஹ்ந' என்றதில், வத்ஸசிஹ்ந என்பது வத்ஸே – மார்பில், சிஹ்நத்தை –

மறுவையுடைய எம்பெருமானை முற்படக்காட்டி, அவனுடைய பெயரைக் கொண்ட கூரத்தாழ்வானைப் பின்பு குறிப்பிட்டு, அவ்வாழ்வானுக்குப் பெரியபிராட்டியாரோடு உள்ள ஒற்றுமையை ஸ்ரீஶப்$_3$த$_3$ம் தெரிவிக்கிறது. ஸ்ரீயே ஆகிய வத்ஸசிஹ்நரென்றவாறும். தனக்குப் பகைவராகிய ஏகாக்ஷி முதலிய அரக்கியரைக் காப்பாற்றிய ஸீதாப்பிராட்டியோடு தமக்குக் கண்போகக் காரணமாகிய நாலூரானுக்கும் முத்திநல்கிய கூரத்தாழ்வான் எல்லையற்ற கருணையுடைமையில் ஒற்றுமையுடையவரிறே. முன் ஶ்லோகத்தில் 'ப்ரணமாமி மூர்த்$_4$நா' என்று தலையால் வணங்குதலாகிய காயிகமான மங்க$_3$ளம் செய்யப்பட்டது. இஶ்லோகத்தில் 'ஈடே$_3$' என்று துதி செய்தலாகிய வாசிகமங்க$_3$ளம் செய்யப்படுகிறது. வாக்-காயங்களின் முயற்சி, மனத்தின்கண் நினைவில்லாமல் நிகழாதாகையால் – மனத்தில் யதிராஜரை உயர்ந்தவராக நினைத்தலாகிய மாநஸிகமங்க$_3$ளமும் செய்யப்பட்டதாகவே கொள்ளத்தக்கது. இங்ஙனம் இரண்டு ஶ்லோகங்களால் மங்க$_3$ளம் செய்து மேலே நூலைத்தொடங்குகிறார் மாமுனிகள் என்க.(2)

वाचा यतीन्द्र मनसा वपुषा च युष्मत्पादारविन्दयुगलं भजतां गुरूणाम्।
कूराधिनाथकुरुकेशमुखाद्यपुंसां पादानुचिन्तनपरस्सततं भवेयम्।। ३

வாசா யதீந்த்$_3$ர மநஸா வபுஷா ச யுஷ்மத்பாத$_3$ாரவிந்த$_3$யுக$_3$ளம் ப$_4$ஜதாம் கு$_3$ரூணாம்।
கூராதி$_4$நாத$_2$குருகேஶமுக$_2$ாத்$_3$யபும்ஸாம் பாத$_3$ாநுசிந்தநபரஸ்ஸததம் ப$_4$வேயம்।। 3

**பதவுரை:– ஹே யதீந்த்$_3$ர** – வாரீர் யதிராஜரே, **மநஸா** – மனத்தினாலும், **வாசா** – நாவினாலும், **வபுஷா ச** – தே$_3$ஹத்தினாலும், **யுஷ்மத்** – தேவரீருடைய, **பாத$_3$ாரவிந்த$_3$யுக$_3$ளம்** –தாமரைமலர் போன்ற திருவடிகளின் இரட்டையை, **ப$_4$ஜதாம்** – ஸேவித்துக் கொண்டிருக்கிற, **கு$_3$ரூணாம்** – ஆசார்யர்களாகிய, **கூராதி$_4$நாத$_2$ குருகேஶ முக$_2$ ஆத்$_3$யபும்ஸாம்** – கூரத்தாழ்வான், திருக்குருகைப்பிரான்பிள்ளான் முதலிய பூர்வாசார்யர்களுடைய, **ஸததம் பாத$_3$ அநுசிந்தந பர:** – எப்போதும் திருவடிகளைச் சிந்திப்பதில் ஊன்றியவனாக, **ப$_4$வேயம்** – (அடியேன்) ஆகக்கடவேன்.

**கருத்துரை:–** மேல் ஶ்லோகத்தில் யதிராஜருக்கடிமையாயிருத்தலை ப்ரார்த்தி$_2$க்கிறவராய்க்கொண்டு, அது தன்னைத் திடப்படுத்துகிற – யதிராஜ ஶிஷ்யர்களுக்கு அடிமையாயிருத்தலை இந்த ஶ்லோகத்தினால் ப்ரார்த்தி$_2$க்கிறார். கூராதி$_4$நாத$_2$ர்-கூரத்தாழ்வான். குருகேசர் எம்பெருமானாரால் ஜ்ஞாந புத்திரராக ஸ்வீகாரம் செய்து கொள்ளப்பெற்ற திருக்குருகைப்பிரான் பிள்ளான். முக$_2$(முதலான)என்பதனால் எம்பார், முதலியாண்டான் தொடக்கமான மற்றுமுண்டான ஶிஷ்யர்களைக் கொள்க. கு$_3$ரூணாம் – க்$_3$ருணந்தி இதி கு$_3$ரவ: என்ற வ்யுத்பத்தியினால் உபதே$_3$ஶம் செய்யுமவர்களை இந்த கு$_3$ரு ஶப்$_3$த$_3$ம் குறிக்கும். மேலும் 'கு$_3$' என்பது அறியாமையாகிற அகவிருளையும், 'ரு' என்பது அதைப்போக்குமவரையும் குறிப்பிட்டு– கு$_3$ரு ஶப்$_3$த$_3$ம் அறியாமையைத் தமது உபதே$_3$ஶத்தால் போக்குமவரைக் குறிப்பிடும். இது கூரத்தாழ்வான் முதலியோர்க்கு அடைமொழியாகும். பும்ஸாம் என்பதில் பும்ஸ்ஶப்$_3$த$_3$ம் – புநந்தி இதி புமாம்ஸ: என்ற

வ்யுத்பத்தியினுல் பரிஶுத்$_3$த$_3$மானவர்களைத் தெரிவிக்குமதாய், ப$_4$க$_3$வானுக்கும் அவனடியார்களுக்கும் சிறப்பாக எம்பெருமானுர்க்கும் அடிமையாக இருப்பதனுல் பரிஶுத்$_3$த$_4$ர்களான கூரத்தாழ்வான் முதலியோர்க்கு விஶேஷணமாகும். அநுசிந்தநமானது— கூரத்தாழ்வான் முதலிய ராமாநுஜ ஶிஷ்யர்களைத் தமக்கு ஶேஷிகளாக — தலைவர்களாக த்$_4$யாநித்தலாகும். ப$_4$வேயம் — இது ப்ரார்த்த$_2$னை என்னும் பொருளில் வந்த லோட் ப்ரத்யயாந்தமாகையால் கூரத்தாழ்வான் முதலிய பூர்வம் புருஷர்களுடைய திருவடிகளை அடியேன் சிந்திப்பவனுக ஆகவேண்டுமென்று. யதீந்த்$_3$ரரான தேவரீரை ப்ரார்த்தி$_2$க்கிறேன் என்ற கருத்து இதற்குத் தேறும். (3)

नित्यं यतीद्र तव दिव्यवपुस्स्मृतौ मे सक्तं मनो भवतु वाग्गुणकीर्तनेऽसौ ।
कृत्यञ्च दास्यकरणं तु करद्वयस्य वृत्त्यन्तरेऽस्तु विमुखं करणत्रयञ्च ।। ४

நித்யம் யதீந்த்$_3$ர தவ தி$_3$வ்யவபு:ஸ்ம்ருதௌ மே ஸக்தம் மநோ ப$_4$வது வாக்$_3$கு$_3$ணகீர்த்தநே [஽ஸௌ।
க்ருத்யஞ்ச தா$_3$ஸ்யகரணம் து கரத்$_3$வயஸ்ய வ்ருத்யந்தரே஽ஸ்து விமுக$_2$ம் கரணத்ரயஞ்ச॥

**பதவுரை:– ஹே யதீந்த்$_3$ர** – வாரீர் யதிராஜரே, **மே**– அடியேனுடைய, **மந:** – மனமானது, **தவ** – தேவரீருடைய, **தி$_3$வ்யவபு: ஸ்ம்ருதௌ**– மிகவும் அழகிய திருமேனியை நினைப்பதில், **நித்யம்** – எப்போதும், **ஸக்தம்** – பற்றுடையதாக, **ப$_4$வது** – இருந்திடுக. **அஸௌ மே வாக்** – தேவரீரைத் துதியாமல் வெகுதூரத்தில் இருக்கிற அடியேனுடைய வாக்கானது, **தவ** – தேவரீருடைய, **கு$_3$ணகீர்த்தநே** – நீர்மை எளிமை கருணை அழகு மென்மை முதலிய கல்யாணகுணங்களை ஆசையோடு துதிப்பதில், **ஸக்தா ப$_4$வது** – பற்றுடையதாக இருந்திடுக. **மே** – அடியேனுடைய, **கரத்$_3$வயஸ்ய** – இரண்டு கைகளுக்கும், **தவ** – தேவரீருக்கு, **தா$_3$ஸ்ய கரணம் து** – அடிமை செய்வதொன்றே, **க்ருத்யம்** – கடமையாக, **அஸ்து** – இருந்திடுக. **மே** – அடியேனுடைய, **கரணத்ரயம்** – (தேவரீரையே நினைப்பதிலும் துதிப்பதிலும் அடிமைசெய்வதிலும் பற்றுடையதாக இருக்கவேணுமென்று ப்ரார்த்தி$_2$க்கப்பட்ட) மனம் வாக்கு காயம் என்கிற மூன்று கருவிகளும், **வ்ருத்தி அந்தரே** – வேறொருவரை நினைப்பதும் துதிப்பதும் அடிமை செய்வதுமாகிய வேறு காரியங்களில் , **விமுக$_2$ம் ச அஸ்து** – பராமுக$_2$ங்களாகவும் இருந்திடுக.

**கருத்துரை**:– கீழ்ஶ்லோகத்தில் யதிராஜ ஶிஷ்யர்களான கூரத்தாழ்வான் முதலியவர்களுக்குத் தாம் அடிமையாயிருத்தலை ப்ரார்த்தி$_2$த்தவர், அதனுல் திடப்படுத்தப் படுகிற யதிராஜருக்குத் தாம் அடிமையாயிருத்தலை இந்த ஶ்லோகத்தினுல் ப்ரார்த்தி$_2$க்கிருர். 'க்ருத்யம் ச' என்றவிடத்திலுள்ள உம்மைப் பொருள் படுகின்ற சகரம், மற்றும் நல்ல விஷயங்களில் ஈடுபடவேண்டிய கண் காது முதலியவற்றையும் குறிப்பிட்டு, அவையும் யதிராஜர் திறத்திலேயே பற்றுடையதாக இருக்க வேண்டுமென்ற ப்ரார்த்த$_2$னையைக் காட்டுகிறது. இதில் முதல் மூன்றடிகளால் தம்முடைய மனமொழிமெய்கள் யதிராஜரிடமே ஊன்றியிருக்கவேண்டுமென்பதையும், நான்காம் அடியால் மற்றவரிடம் பற்றற்றிருக்க

வேண்டுமென்பதையும் யதிராஜர் தம்மிடமே ப்ரார்த்தி$_2$த்தாராயிற்று. ப$_4$வது அஸ்து என்ற க்ரியாபத$_3$ங்களிரண்டும் ப்ரார்த்த$_2$னையைக் காட்டும் லோட்ப்ரத்யயாந்தங்கள். க்ருத்யம் – அவஶ்யமாகச் செய்தே தீரவேண்டிய கடமை என்றபடி. முதலடியில் உள்ள தவ, மே என்பனவற்றை மற்ற மூன்றடிகளோடும் கூட்டுக.(4)

अष्टाक्षराख्यमनुराजपदत्रयार्थनिष्ठां ममात्र वितराद्य यतीन्द्रनाथ ।
शिष्टाग्रगण्यजनसेव्यभवत्पदाब्जे हृष्टास्तु नित्यमनुभूय ममास्य बुद्धिः ।। (५)

அஷ்டாக்ஷராக்ய மநுராஜ பத$_3$த்ரயார்த்த$_2$ நிஷ்ட$_2$ாம் மமாத்ர விதராத்$_3$ய யதீந்த்$_3$ரநாத$_2$।
ஶிஷ்டாக்$_3$ரக$_3$ண்யஜநஸேவ்யப$_4$வத்பத$_3$ாப்$_3$ஜே ஹ்ருஷ்டாऽஸ்து நித்யமநுபூ$_4$ய மமாஸ்ய பு$_3$த்$_3$தி$_4$:॥

**பதவுரை:– நாத$_2$** – அடியோங்களுக்கு ஸ்வாமியாகிய, **யதீந்த்$_3$ர** – யதிராஜரே, **அத்ர** – இருள்தருமாஞாலமாகிற இந்த ஸம்ஸார மண்ட$_3$லத்தில், **அத்$_3$ய** – கலிபுருஷன் அரசு செலுத்துகிற இக்காலத்தில், **மம** – மிகவும் தாழ்ந்த அடியேனுக்கு, **அஷ்டாக்ஷர ஆக்$_2$ய மநுராஜ** – அஷ்டாக்ஷரமென்று ப்ரஸித்$_3$தி$_4$பெற்ற சிறந்த மந்த்ரத்திலுள்ள, **பத$_3$த்ரய அர்த்த$_2$ நிஷ்ட$_2$ாம்** – ஓம் நம: நாராயணாய என்ற மூன்று பத$_3$ங்களினுடைய பொருள்களாகிய அநந்யார்ஹஶேஷத்வம், அநந்யஶரணத்வம், அநந்யபோ$_4$க்$_3$யத்வம் (எம்பெருமானொருவனுக்கே அடிமையாகை, எம்பெருமானையே மோக்ஷோபாயமாகக் கொள்ளுகை, எம்பெருமானையே போ$_4$க்$_3$யமாக– அநுப$_4$விக்கத்தக்க பொருளாகக் கொள்ளுகை.) என்கிற இம்மூன்றினுடையவும் முடிவெல்லையை, **விதர** – தந்தருளவேணும். **ஶிஷ்ட அக்$_3$ரக$_3$ண்ய ஜந ஸேவ்ய ப$_4$வத் பத$_3$ாப்$_3$ஜே** – பரதத்த்வம் மோக்ஷோபாயம் புருஷார்த்த$_2$ம் (பயன்) ஆகியவிவற்றில் திரிபுணர்ச்சியில்லாத ஶிஷ்டர்களுக்குள்ளே, தேவரீரே பரதத்த்வம் தேவரீரே மோக்ஷோபாயம் தேவரீரே புருஷார்த்த$_2$ம் என்று நினைப்பதனாலே முதலில் எண்ணத்தக்க முற்கூறிய கூரத்தாழ்வான் திருக்குருகைப்பிரான்பிள்ளான் முதலான ஸஜ்ஜநங்களாலே அடிமைசெய்யத்தக்க தேவரீருடைய தாமரைமலர் போன்ற திருவடிகளை, **நித்யம் அநுபூ$_4$ய** – எப்போதும் அநுப$_4$வித்து, **அஸ்ய மம பு$_3$த்$_3$தி$_4$:**– மிகத்தாழ்ந்த அடியேனுடைய பு$_3$த்$_3$தி$_4$யானது, **ஹ்ருஷ்டா** – அவ்வநுப$_4$வத்தின் பயனாகிய கைங்கர்யம் கிடைத்ததனாலுண்டான ஸந்தோஷத்தை உடையதாக, **அஸ்து** – ஆயிடுக.

**கருத்துரை:**– இந்த ஶ்லோகம் முதலாக மேலுள்ள ஶ்லோகங்கள் அனைத்தும், 'நித்யம் யதீந்த்$_3$ர' என்ற முன் ஶ்லோகத்தின் விவரணமாகவே அமைந்துள்ளன. 'ஸ்ரீமந்யதீந்த்$_3$ர' என்ற பத்தொன்பதாம் ஶ்லோகம் இந்த ஸ்தோத்ரத்தின் பொருளாகிய யதீந்த்$_3$ர கைங்கர்ய ப்ரார்த்த$_2$னைக்கும் யதீந்த்$_3$ர த$_3$ாஸகைங்கர்ய ப்ரார்த்த$_2$னைக்கும் உபஸம்ஹாரமாக அமைந்துள்ளது. 'விஜ்ஞாபநம் யதி$_3$தம்' என்ற இருபதாம் ஶ்லோகமோவென்னில் முதல் முடிவு நடுப்பகுதிகளாலே கூறப்பட்ட பொருளைக் காரணம் கூறித்திடப்படுத்துவதாக அமைந்துள்ளது. அஷ்டாக்ஷர மந்த்ரத்திலுள்ள மூன்று பத$_3$ங்களின் பொருள்களுக்கு முடிவான எல்லையாவது – ஆசார்யனுக்கே அடிமையாகை,

ஆசார்யனையே மோக்ஷோபாயமாகக் கொள்ளுகை ஆசார்யனையே போ4க்3யமாக (அநுப4விக்கத்தக்கபொருளாகக்) கொள்ளுகை ஆகிய இவை மூன்றுமே ஆகும். நடுவெல்லேயோவெனில் – பா4க3வதர்களுக்கே அடிமையாகை பா4க3வதர்களேயே மோக்ஷோபாயமாகக் கொள்ளுகை, பா4க3வதர்களேயே போ4க்3யமாகக் (அனுப4விக்கத்தக்க பொருளாகக்) கொள்ளுகையாகிய இவையே. முதல் பர்வம் எம்பெருமான், மத்4யமபர்வம் – பா4க3வதர்கள், சரமபர்வம் – ஆசார்யன். ஸ்ரீமத3ஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்திலுள்ள ஓம் நம: நாராயணுய என்ற மூன்று பத3ங்களும் நேரான பத3ப்பொருள்களுக்கேற்றபடி, முதலில் ஶேஷித்வ ஶரண்யத்வ போ4க்3யத்வங் களே ப4க3வான் விஷயத்திலே தெரிவித்து, பின்பு ப4க3வானுடைய திருவடி ஸ்த2ாநத்திலே நிற்கும் பா4க3வதர்கள் விஷயத்திலே தெரிவித்து, அதற்குப்பிறகு அந்த பா4க3வதர்களால் கொண்டு சேர்க்கப்படுகிற பா4க3வதோத்தமரான ஆசார்யன் விஷயத்திலே தெரியப்படுத்தி நின்றுவிடுகின்றன. ஆசார்யனுகிற விஷயமே சரமமாகையால் என்க. ப்ரத2மபர்வம் ப4க3வான், மத்4யமபர்வம் – பா4க3வதர், சரமபர்வம் – ஆசார்யன். ஆக இந்த ஶ்லோகத்தில் முற்பகுதியினல் மாமுனிகள் எம்பெருமானுரை ஸம்போ3தி4த்து, யதிராஜரான எங்கள் குலநாத2ரே! திருவஷ்டாக்ஷரத்தின் மூன்று பத3ப்பொருள்களின் முடிவெல்லேயை (உத்தாரகாசார்யராகிய தேவரீருக்கே அடிமையாயிருக்கை, தேவரீரையே மோக்ஷத்திற்கு உபாயமாகக் கொள்ளுகை, தேவரீரையே போ4க்3யமாகக் கொள்ளுகை என்கிற இம்மூன்றினேயும்) அடியேன் திடமாகப் பற்றியிருக்கும்படி க்ருபை செய்தருளவேணும் என்று ப்ரார்த்தி2த்தாராயிற்று. மந்த்ரராஜமென்பது முப்பத்திரண்டெழுத்துக்களேக் கொண்ட நரஸிம்ஹாநுஷ்டுப் மந்த்ரத்திற்கும் பெயராகையால் அதை நீக்க வேண்டி 'அஷ்டாக்ஷராக்2ய' என்று மந்த்ரராஜத்திற்கு அடைமொழி கொடுத்தருளினுர். திருமந்த்ரம் எட்டெழுத்து உடையதாகவன்ரே ப்ரஸித்3த4மாயிருப்பது. இதில் பிற்பகுதியினல், ஆசார்ய நிஷ்ட2ர்களாகிய கூரத்தாழ்வான் முதலியாண்டான் போல்வாரான ஶிஷ்ட ஜநங்கள் அநுப4வித்துத் தொண்டுசெய்து மகிழ்ச்சியடைவதற்குக் காரணமான தேவரீருடைய திருவடித்தாமரைகளில், ஆசார்ய நிஷ்ட2னுகிய அடியேனும் இழிந்து அநுப4வித்துக் கைங்கர்யம் செய்து மகிழும்படி தேவரீர் அருள்புரியவேண்டுமென்று ப்ரார்த்தி2த்தாராயிற்று.(5)

अल्पापि मे न भवदीयपदाब्जभक्तिः शब्दादिभोगरुचिरन्वहमेधते हा ।
मत्पापमेव हि निदानममुष्य नान्यत् तद्वारयार्य यतिराज दयैकसिन्धो ।।(६)

அல்பாபி மே ந ப4வதீய பத3ாப்3ஜ ப4க்தி: ஶப்3த3ாதி3 போ4க3ருசிரந்வஹமேத4தே ஹா।
மத்பாபமேவ ஹி நித3ாநமமுஷ்ய நாந்யத் தத்3வாரயார்ய யதிராஜ த3யைகஸிந்தே4ா॥ 6

**பதவுரை:–த3யா ஏக ஸிந்தே4ா** – த3யை என்னும் நீர் வற்ருத ஒப்பற்ற கடலே, **ஆர்ய** – ஆசார்யரே, **யதிராஜ** – எதிகட்கு இறைவரான எம்பெருமானுரே, **மே** – அடியேனுக்கு, **ப4வதீய பத3ாப்3ஜ ப4க்தி:** – தேவரீருடைய திருவடித்தாமரைகளில் ஆசையானது,

**அல்பா அபி** – சிறது கூட, **ந** (அஸ்தி) – இல்லே, **ஸப்$_3$த$_3$ ஆதி$_3$ போ$_4$க$_3$ ருசி:** – ஸப்$_3$த$_3$ம் முதலியவற்றை (தாழ்ந்த பொருள்களிலுள்ள சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்றிவற்றை) அநுப$_4$விப்பதில் ஆசையானது, **அந்வஹம்** – ஒவ்வொரு நாள்களிலும், **ஏத$_4$தே** – வளர்ந்து வருகிறது, **ஹா** – கஷ்டம், **அமுஷ்ய** – தகுந்த விஷயத்தில் ஆசை சிறிதுமில்லாமையும் தகாத விஷயத்தில் ஆசை பெருகி வருவதுமாகிய இதற்கு, **நித$_3$ாநம்** – மூலகாரணம், **மத்பாபமேவ** (ப$_4$வதி) அடியேனுடைய அநாதி$_3$யான பாபமே ஆகும். **அந்யத் ந** – வேறென்றுமன்று, **தத்** – அந்த பாபத்தை, **வாரய** – போக்கியருளவேணும்.

**கருத்துரை:–** 'நித்யம் யதீந்த்$_3$ர' என்ற நான்காவது ஸ்லோகத்தில், அடியேனுடைய மனம் தேவரீர் திருமேனியை நினேப்பதில் ஊற்றமுடையதாக இருக்கட்டும். வேறென்றை எண்ணுவதில் பராமுக$_2$மாக இருக்கட்டும்' என்று அருளியதனுல், இப்பொழுது தமது மனம் அப்படியில்லாமல் நேர்முரணுக இருப்பதனேக் குறிப்பாக உணர்த்தினுரல்லவா? இத்தகைய முரண்பாட்டை, அதன்காரணமான பாபத்தோடு கூடப்போக்கியருளவேணுமென்கிருர் இந்த ஸ்லோகத்தினுல். த$_3$யையாவது – தனது பயனென்றையும் எதிர்பாராமல், பிறர்துன்பம் கண்டால், தானும் 'ஐயோ இப்படி துன்பப்படுகிருனே' என்று துன்பப்படுகை. அத்தகைய த$_3$யையாகிய நீர் வற்ருத கடல்போன்றவர் எம்பெருமானுர். 'ஒப்பற்ற' என்பதனுல், எம்பெருமானுகிய கடலில் த$_3$யையாகிய நீர் வற்றினுலும் வற்றும். எம்பெருமானுராகிய கடலில் த$_3$யை வற்ருது என்பது கருதப்பட்டது. ஆர்ய ஸப்$_3$த$_3$ம் (1) ஆசார்யஸப்$_3$த$_3$த்தோடு ஒரே பொருளேயுடையதாய்க்கொண்டு அறியாத தத்த்வஹித புருஷார்த்த$_2$ங்களே அறிவிப்பதன் வாயிலாக மோக்ஷத்திற்குக் காரணமாகிருர் எம்பெருமானுரென்று அறவிக்கிறது. (2) ஆராத் யாதி இதி ஆர்ய: என்ற வ்யுத்பத்தியின் மூலமாக, வேத$_3$த்தில் கூறிய நல்ல வழியின் அருகிலும், கெட்டவழியின் தொலேவிலேயும் செல்லுமவர் என்று பொருள்பட்டு, எம்பெருமானுர் பரமவைதி$_3$கர் என்பதைக் காட்டுகிறது. ஆராத் = அண்மையும் சேய்மையும். (3) அர்யதே – ப்ராப்யதே – அடையப்படுகிருர் என்று பொருள்பட்டு, எல்லாராலும் வீடுபேற்றிற்காக அடையப்படுமவர் எம்பெருமானுர் என்ற கருத்தைப் புலப்படுத்துகிறது. வருத்தம் வியப்பு என்னும் இரண்டையும் குறிக்கின்ற ஹா என்ற இடைச்சொல் – முறையே – தக்க பொருளில் ஆசையின்மையும், தகாத பொருளில் ஆசையுடைமையும் தமக்கு வருத்தத்தைத் தருகிறது என்றும், குறைந்த ஸுக$_2$த்தைத் தரும் ஸப்$_3$த$_3$ாதி$_3$ விஷயங்களேயே விரும்பி, மிகவும் அதிகமான ஸுக$_2$த்தை உண்டுபண்ணும் எம்பெருமானுர் திருவடிகளே விரும்பாமலிருப்பது தமக்கு வியப்பைத் தருகிறது என்றும் இரண்டு கருத்துக்களேத் தெரிவிக்கும். 'மத்பாபமேவ – நான் செய்த பாபமே, நித$_3$ாநம் – மூலகாரணம்' என்பதனுல் – ப$_4$க்திமான்களேப் பகைப்பதனுல் அப்ப$_4$க்திமான்கள் ப$_4$க்தராவதற்கு முன்பு செய்த பாபங்களே எம்பெருமான் அவர்களேப் பகைப்பவர்கள் மேலே ஏறிடுவதுமுண்டு. அப்படி அடியேன் மேலேறிட்ட பாபமன்று, அடியேனே செய்த பாபம் மூலகாரணம் என்று தெரிகின்றது. 'அந்யத் ந' – வேறென்றுமன்று என்பதனுல் –

ஸர்வேஶ்வரன் தனது ஸ்வதந்த்ரத்தன்மையினாலோ, அடியேனையிட்டு விளையாட எண்ணியதனாலோ அடியேன் தகாத பொருளில் ஆசையும் தக்க பொருளில் ஆசையில்லாமையும் உடையவனாயிருக்கிறேனல்லேன்; பின்னையோவென்னில் அடியேன் செய்த பாபத்தினாலேயே இப்படி இருக்கிறேன் – என்பது குறிப்பிடப்படுகிறது. (6)

वृत्त्या पशुर्नरवपुस्त्वहमीदृशोऽपि श्रुत्यादिसिद्धनिखिलात्मगुणाश्रयोऽयम् ।
इत्यादरेण कृतिनोऽपि मिथः प्रवक्तुम् अद्यापि वञ्चनपरोऽत्र यतीन्द्र! वर्ते ।।(७)

**வ்ருத்த்யா பஶுர் நரவபுஸ்த்வஹமீத்$_3$ருஶோऽபி**
**ஶ்ருத்யாதி$_3$ஸித்$_3$த$_4$ நிகி$_2$லாத்மகு$_3$ணாஶ்ரயோऽயம்।**
**இத்யாத$_3$ரேண க்ருதிநோऽபி மித$_2$: ப்ரவக்தும்**
**அத்$_3$யாபி வஞ்சநபரோऽத்ர யதீந்த்$_3$ர! வர்த்தே॥** **(7)**

**பதவுரை:– ஹே யதீந்த்$_3$ர –** வாரீர் யதிராஜரே, **வஞ்சநபர: –** பிறரை ஏமாற்றுவதிலேயே பற்றுடையவனான, **அஹம்** – அடியேன், **நரவபு:** – மனிதவுடல் கொண்ட, **பஶு: து** – விலங்காகவே (விலங்கென்றே) **வ்ருத்த்யா** – அடியேனுடைய செய்கையினாலே, **(ஜ்ஞாயே** – அறியப்படுகிறேன்.) (உண்பதும்,உறங்குவதும், கலவி செய்வதும், பகைவனைக்கண்டு அஞ்சுவதுமாகிய இவற்றாலே அறிவிக்கப்பட்ட மனித விலங்கின் தன்மையை உடையேன் என்றபடி.) **ஈத்$_3$ருஶ: அபி** – இப்படிப்பட்டவனாக இருந்த போதிலும், **ஶ்ருதி ஆதி$_3$ ஸித்$_3$த$_4$ நிகி$_2$ல ஆத்மகு$_3$ண ஆஶ்ரய:** – 'வேத$_3$ம் முதலியவற்றால் அறிவிக்கப்பட்ட எல்லா ஆத்மகு$_3$ணங்களுக்கும் இருப்பிடமானவன், **அயம்** – இந்த மணவாளமாமுனிவன்' **இதி** – என்றிவ்வாறாக, **க்ருதிந: அபி** – பாமரரன்றிக்கே பண்டிதராய் ஆராய்ச்சி வல்லுநருங்கூட, **ஆத$_3$ரேண** – மனமார்ந்த அன்போடு, **மித$_2$:** – தங்களில் ஒருவர்க்கொருவர், **ப்ரவக்தும்** – (அவசியமாகச் சொல்லவேண்டிய நல்வார்த்தையைப் போலே) சொல்லுவதற்குத் தக்கபடியாக, **அத்ர அபி** – (வேறொருரிடத்திலல்லாமல்) இந்த ஸ்ரீரங்க$_3$த்திலும், **அத்$_3$ய** – இப்போது, **வர்த்தே** – இருக்கிறேன். **தத்$_3$வாரய** – அந்த (பிறரை வஞ்சிக்கும் எனது) தன்மையைப் போக்கியருளவேணும்.

**கருத்துரை:–** அஹிம்ஸை மெய்பேசுதல் கொடுமையில்லாமை தூய்மை பொறியடக்கம் கொடைத்தன்மை மனவடக்கம் பொறுமை அறிவு முதலியவையே வேத$_3$ம் முதலியவற்றால் அறிவிக்கப்படுகிறன்ற ஆத்மகு$_3$ணங்கள் (உயிரின் நற்பண்புகள்) ஆகும். 'இவன் ஆத்மகு$_3$ணங்களுக்கெல்லாம் இருப்பிடமானவன்' என்றால் மற்றும் சிலரும் ஆத்மகு$_3$ணங்களுக்கு இருப்பிடமாக உள்ளார்கள் என்ற கருத்துத்தோன்றக் கூடுமென்று நினைத்து அப்படிச்சொல்லாமல், 'ஆத்மகு$_3$ணங்களுக்கெல்லாம் இருப்பிடமானவன் இவன்' என்று சொன்னதனால், 'அத்தகையவன் இம்மணவாளமாமுனி ஒருவனே' என்று ஆராய்ச்சியாளரும் தம்மைப்பற்றி மகிழ்ந்து பேசுமளவிற்குத் தமக்குள்ள ஏமாற்றும் வல்லமையைக் குறிப்பிட்டருளினாரென்க. அத்$_3$யாபி என்றவிடத்திலுள்ள அபி ஶப்$_3$த$_3$த்தை,

$_3$ஶவாஸம் செய்யாமல், வஞ்சநமென்பதே அடியோடு தெரியாத நாத$_2$யாமுநாதி$_3$ பூர்வாசார்யர்கள் வாஸம் செய்தருளின மிகப்புண்ணியமான ஸ்ரீரங்க$_3$த்தில் வஸிப்பதும் செய்கிறேனே, இதைவிட வஞ்சனை வேறுண்டோ என்பது அதன் கருத்தாகும்.

दु:खावहोऽहमनिशं तव दुष्टचेष्टः शब्दादिभोगनिरतः शरणागताख्यः ।
त्वत्पादभक्त इव शिष्टजनौघमध्ये मिथ्या चरामि यतिराज! ततोऽस्मि मूर्खः ॥(८)

**து$_3$:க$_2$ாவஹோऽஹமநிஶம் தவ து$_3$ஷ்டசேஷ்ட:**
**ஶப்$_3$த$_3$ாதி$_3$பே$_4$ாக$_3$நிரதஶ்ஶரணாக$_3$தாக்$_2$ய:।**
**த்வத்பாத$_3$ப$_4$க்த இவ ஶிஷ்டஜநௌக$_4$மத்$_4$யே**
**மித்$_2$யா சராமி யதிராஜ ததோऽஸ்மி மூர்க்க$_2$:॥** (8)

**பதவுரை:– ஹே யதிராஜ** – வாரீர் யதிராஜரே, **ஶரணாக$_3$த ஆக்ய:** – ஶரணாக$_3$தன், (ப்ரபந்நன்) என்னும்பெயரை மாத்திரம் சுமப்பவனாய், **ஶப்$_3$த$_3$ாதி$_3$ பே$_4$ாக$_3$நிரத:** – ஶப்$_3$த$_3$ாதி$_3$ நீசவிஷயங்களை அநுப$_4$விப்பதில் மிகவூன்றியவனாய், **து$_3$ஷ்டசேஷ்ட:** – கூடாதென்று ஶாஸ்த்ரம் விலக்கியகெட்ட காரியங்களைச் செய்யுமவனாய் (அதனால்) **தவ** – தேவரீருக்கு. **து$_3$:க ஆவஹ:** – து$_3$க்க$_2$த்தை உண்டுபண்ணுமவனாய் இருக்கிற, **அஹம்** – அடியேன், **த்வத் பாத$_3$ ப$_4$க்த: இவ** – தேவரீர் திருவடிகளில் ப$_4$க்திபூண்ட ப்ரபந்நன்போல், **ஸிஷ்டஜந ஓக$_4$ மத்$_4$யே** – 'புருஷார்த்த$_2$ம் தேவரீர் கைங்கர்யமே, அதற்கு உபாயம் தேவரீருடைய இன்னருளே' என்று தெளிந்திருக்கும் ஶிஷ்ட ஜநங்களாகிய கூரத்தாழ்வான் முதலியோர்களின் கோஷ்டிகளின் நடுவில், **மித்$_2$யா சராமி** – பொய்யனாகவே திரிகின்றேன், **தத:** – அக்காரணத்தினால், **மூர்க்க$_2$: அஸ்மி** – (அடியேன்) மூடனாக அறிவற்றவனாக ஆகிறேன், **தத்$_3$ வாரய** – அப்படிப்பட்ட அறியாமையைப் போக்கியருளவேணும்.

**கருத்துரை:**–அடியேனுக்கு ஏற்பட்டுள்ள தகாத காரியங்களில் ஊற்றமானது தேவரீருக்கு து$_3$க்க$_2$த்தையுண்டாக்குமாகையால்அவ்வூற்றத்தை நஶிப்பித்தருளவேணுமென்று வேண்டுகிறாரிதனால். யதிராஜர் – மனத்தையடக்கிய எம்பார் முதலிய யதிகளையும் தம்முடைய மனவடக்கத்தாலே மகிழச் செய்யுமரசர் எம்பெருமானார் என்றபடி. ஶரணாக$_3$தாக்$_2$ய: – ஶரணாக$_3$தன் என்ற பெயரை மட்டும் சுமக்கிறேனேயொழிய, ஶரணாக$_3$திக்கு வேண்டிய வேறு உபாயமில்லாமை வேறுகதியில்லாமை ஆகிய தகுதிகளில் ஏதுமுடையேனல்லேன் என்றபடி. ஶரணாக$_3$தனுக்குத் தானாக ஏற்படக்கூடிய நன்மையே செய்யவேண்டுமென்று நினைத்தல், தீமையை அடியோடு அகற்றல், எம்பெருமானார் நிஶ்சயம் நம்மைக் காப்பாற்றியே தீருவர் என்று நம்புதல், தம்மைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானாரிடம் ஒப்படைத்தல், வேறு உபாயமோ வேறு காப்பவரோ தமக்கு இல்லையே என்று வருந்துதல் ஆகிய ஸ்வபா$_4$வங்களில் ஏதுமுடையேனல்லேன் என்றபடியும் ஆம். து$_3$:க$_2$ாவஹ: – அடியேன் இங்ஙனம் ஶரணாக$_3$தனென்று பெயர் சுமந்து, ஶப்$_3$த$_3$ாதி$_3$பே$_4$ாக$_3$

நிரதனாய் து$_3$ஷ்டசேஷ்டனாயிருப்பது – 'ஐயோ நம்முடையவன் ஒருவன் இப்படி இருக்கிறானே' என்று தேவரீருக்கு து$_3$க்க$_2$த்தை உண்டாக்குமென்றபடி. அல்லது, இவன் ஶரணாக$_3$தனென்று பெயர்படைத்திருப்பதினால் இவனைக்காக்கவேணுமோ, து$_3$ஷ்டசேஷ்டனாக இருப்பதனால் இவனைக் கைவிடவேணுமோ, என்ற ஸந்தே$_3$ஹமாகிய த$_4$ர்மசங்கடமாகிய து$_3$க்க$_2$த்தையுண்டாக்குமென்றும் சொல்லலாம். மூர்க்க$_2$னாகிறான் நன்மை தீமைகளின் பகுத்தறிவின்றியே தான்பிடித்தது விடாமலிருக்குமவன். இத்தகைய மூர்க்க$_2$த்தனத்தைப் போக்கவேணுமென்று இதனால் ப்ரார்த்தி$_2$த்தாராயிற்று.

नित्यं त्वहं परिभवामि गुरुं च मन्त्रं तद्देवतामपि न किञ्चिदहो बिभेमि।
इत्थं शठोऽप्यशठवद्भवदीयसङ्घे हृष्टश्चरामि यतिराज! ततोऽस्मि मूर्खः ।।(९)

**நித்யம் த்வஹம் பரிப$_4$வாமி கு$_3$ரும் ச மந்த்ரம்**
**தத்$_3$தே$_3$வதாமபி ந கிஞ்சித$_3$ஹோ பி$_3$பே$_4$மி।**
**இத்த$_2$ம் ஶடோ$_2$ऽப்யஶட$_2$வத்$_3$ப$_4$வதீ$_3$யஸங்கே$_4$**
**ஹ்ருஷ்டஶ்சராமி யதிராஜ! ததோऽஸ்மி மூர்க்க$_2$:॥ (9)**

**பதவுரை:– ஹே யதிராஜ –** வாரீர் யதிராஜரே, **அஹம்** – அடியேன், **கு$_3$ரும்** – அறியாதவற்றை அறிவித்து அகவிருளைப்போக்கும் ஆசார்யனையும், **மந்த்ரம்** – (அவ்வாசார்யனாலே உபதே$_3$ஶிக்கப்பட்ட) திருமந்த்ரமாகிய அஷ்டாக்ஷர மந்த்ரத்தையும், **தத்$_3$ தே$_3$வதாம் அபி** – அம்மந்திரத்துக்கு உள்ளீடான ஸ்ரீமந்நாராயணனையும், **நித்யம் து** – எப்போதுமே, **பரிப$_4$வாமி** – அவமதிக்கிறேன். **கிஞ்சித் அபி** – சிறிதும், **ந பி$_3$பே$_4$மி** – இம்மூன்றை அவமதிப்பதனால் நமக்கு வருங்காலத்தில் என்ன கேடுவிளையுமோ என்று அஞ்சுகிறேனில்லை. **அஹோ** – இது என்ன ஆஶ்சர்யம். **இத்தம்** – இவ்விதமாக, **ஶட$_2$: அபி** – யாரும் அறியாமல் தீமை செய்யுமவனாயிருந்து வைத்தும், அல்லது ஶாஸ்த்ரத்தில் நம்பிக்கையில்லாதவனாயிருந்து வைத்தும், **அஶட$_2$வத்** – உள்ளும் புறமும் ஒக்க நன்மையே செய்யுமவன் போலவும், அல்லது முன்கூறிய மூன்றிலும் மதிப்பு வைக்கவேண்டுமென்று கூறும் ஶாஸ்த்ரத்தில் நம்பிக்கைமிக்க ஆஸ்திகன் போலவும், **ப$_4$வதீயஸங்கே$_4$** – தேவரீர் திருவடிகளில் ப$_4$க்தி பூண்ட அடியார்களின்-பரமாஸ்திகர்களின் கோ$_3$ஷ்டியில், **ஹ்ருஷ்ட: ஸந்** – நாம் செய்யும் தீமைகள் இவர்களுக்குத் தெரியாமலிருக்கிறதே என்று மகிழ்ச்சி யடைந்தவனாய்க் கொண்டு, **சராமி** – ஸஞ்சரிக்கிறேன். **தத:** – அதனால் **அஹம் மூர்க்க$_2$: அஸ்மி** – அடியேன் மூர்க்க$_2$னாகிறேன். **தத்$_3$வாரய** – கீழ்க் கூறிய இத்தகைய மூர்க்க$_2$த்தனத்தைப் போக்கியருளவேணும்.

**கருத்துரை:–** கீழ் நான்காம் ஶ்லோகத்தில் 'அடியேனுடைய வாக்கு தேவரீருடைய கு$_3$ணங்களைச் சொல்லிப் புகழ்வதில் ஊற்றமுடையதாக இருக்கட்டும்' என்று அருளிச் செய்தவர் அதற்கு நேர்மாறாக கு$_3$ருமந்த்ரதே$_3$வதைகளை வாயார வைது பரிப$_4$வித்தலாகிற கெட்டகாரியங்களில் வாக்கு ஊன்றியிருப்பதையறிந்து, இத்தகைய பரிப$_4$விக்கும் தீய செயலையும் அதற்குக் காரணமான மூர்க்க$_2$த்தனத்தையும் போக்கியருள வேணுமென்று ப்ரார்த்தி$_2$க்கிறார்.

கு$_3$ருவை அவமதிப்பதாவது – அவர் உபதே$_3$ஶித்தபடி விடவேண்டியவற்றை விடாமலிருத்தல், பற்ற வேண்டியவற்றைப் பற்றுமலிருத்தல். தனக்கொரு ப்ரஸித்$_3$தி$_4$க்காகவோ கௌ$_3$ரவத்திற்காகவோ த$_4$நலாப$_4$த்திற்காகவோ, மந்திரம் கேட்கத் தகுதியற்றவர்கட்கு மந்திரத்தை உபதே$_3$ஶித்தல் ஆகிய இவையே ஆம். மந்த்ரத்தை அவமதிப்பதாவது – மந்திரத்திலுள்ள உண்மைப்பொருளே மறைத்தலும் விபரீதப் பொருளுரைத்தலும் ஆம். மந்த்ரத்தால் கூறப்பட்ட தே$_3$வதையை அவமதிப்பதாவது – ஸ்ரீமந்நாராயணனுல் ஸ்ருஷ்டிகாலத்தில் தரப்பட்ட மனமொழி மெய்களே அவன் விஷயத்தில் உபயோகப்படுத்தாமல், பிற நீச விஷயத்தில் உபயோகப் படுத்துதல் ஆகும். இவற்றின் விரிவு ஸ்ரீவசநபூ$_4$ஷணுதி$_3$களில் காண்க. அஹோ – ஆஶ்சர்யம். உலகத்தில் எங்கும் அடியேன் போன்ற பாவியும், பாவத்திற்கு அஞ்சாமலிருப்பனும் தென்படாமையால் அடியேனுக்கே இது ஆஶ்சர்யத்தைத் தருகின்றதென்கிருர் 'அஹோ' என்பதனுல்.

हा हन्त हन्त मनसा क्रियया च वाचा योऽहं चरामि सततं त्रिविधापचारान् ।
सोऽहं तवाप्रियकरः प्रियकृद्वदेव कालं नयामि यतिराज! ततोऽस्मि मूर्खः ।।(१०)

ஹா ஹந்த ஹந்த மநஸா க்ரியயா ச வாசா
யோऽஹம் சராமி ஸததம் த்ரிவித$_4$ாபசாராந்।
ஸோऽஹம் தவாப்ரியகர: ப்ரியக்ருத்$_3$வதே$_3$வ
காலம் நயாமி யதிராஜ! ததோऽஸ்மி மூர்க்க$_2$:॥ (10)

பதவுரை:– யதிராஜ – வாரீர் யதிராஜரே, ய: அஹம் – எத்தகைய அடியேன், மநஸா வாசா க்ரியயா ச – மனமொழி மெய்களால், த்ரிவித$_4$ அபசாராந் – ப$_4$க$_3$வத$_3$பசார ப$_4$ாக$_3$வதாபசார அஸஹ்யாபசாரங்களாகிற மூவகைப்பட்ட பாபங்களேயும், ஸததம் சராமி – இடைவிடாமல் எப்போதும் செய்து வருகிறேனே, ஸ: அஹம் – அத்தகைய அடியேன், தவ – அடியேனிடம் பரமத$_3$யாளுவாய்ப்பேரன்பு பூண்ட தேவரீர்க்கு, அப்ரியகர: ஸந் – இஷ்டமல்லாதவற்றையே செய்பவனுய்க்கொண்டு, ப்ரியக்ருத்வத் ஏவ – இஷ்டமான வற்றையே செய்பவன் போலே, காலம் நயாமி – காலத்தைக் கழித்துவருகிறேன். ஹா ஹந்த ஹந்த – ஐயோ ஐயோ ஐயோ தத: அஹம் மூர்க்க$_2$: அஸ்மி – அதனுல் அடியேன் மூர்க்க$_2$னுகிறேன், தத்$_3$வாரய – அந்த மூர்க்க$_2$த்தனத்தைப் போக்கியருளவேணும்.

கருத்துரை:– மனத்தின் தீய செயல்களேயும் (தீயசிந்தனேயையும்) அதற்குக் காரணமான மூர்க்க$_2$த்தனத்தையும் போக்கியருளவேணும் என்கிருர். 'நித்யம் யதீந்த்$_3$ர' (4) என்னும் ஶ்லோகத்தில் மனமொழி மெய்களேக் குறிப்பிட்டபடியால், வ்ருத்த்யா பஶு: (7), து$_3$க்க$_2$ாவஹோऽஹம் (8), நித்யந்த்வஹம் (9), ஹா ஹந்த ஹந்த (10) என்கிற இந்த நான்கு ஶ்லோகங்களிலும் மனமொழி மெய்களேக் குறிப்பிட்டிருந்த போதிலும், ஏழு எட்டாம் ஶ்லோகங்களில் வ்ருத்த்யா என்றும் து$_3$ஷ்டசேஷ்ட: என்றும் முதலில் குறிப்பிட்டதையொட்டி

மெய்யின் செயலேயும், ஒன்பதாம் ஸ்லோகத்தில் 'கு$_3$ரும் பரிப$_4$வாமி' என்று முதலில் குறிப்பிட்டதனுல் வாக்கின் செயலேயும், பத்தாம் ஸ்லோகமான இதில் 'மநஸா' – என்று முதலில் கூறியதனுல் மனத்தின் செயலேயும் ப்ரத$_4$ாநமாக நினேக்க வேண்டுமென்று தோன்றுகிறது என்கிருர் உரையாசிரியரான அண்ணவைப்பங்கார்ஸ்வாமி. ப$_4$க$_3$வத$_3$பசாரமாவது – ஸ்ரீமந்நாராயணனே ப்$_3$ரஹ்மருத்$_3$ராதி$_3$களோடு ஸமாநமாக நினேக்கையும், ராமாத்$_3$யவதாரங்களே வெறும் மநுஷ்யராக நினேக்கையும், அர்ச்சாவதாரங்களேக் கல்லாகவும் செம்பாகவும் நினேக்கையும் பிறவும் ஆம். ப$_4$ாக$_3$வதாபசாரமாவது – தனது த$_4$நலாப$_4$த்திற்காகவும், சந்த$_3$னம் புஷ்பம் பெண்கள் ஆகியவற்றிற்காகவும் ஸ்ரீவைஷ்ணவர்க்குப்பண்ணும் விரோத$_4$ம் ஆகும். அஸஹ்யாபசாரமாவது – ஒரு காரணமுமின்றியேயிருக்க, பகவான் என்ருலும், ப$_4$ாக$_3$வதர்களென்ருலும், பொருமலிருக்கையும், ஆசார்யாபசாரமும் தொடக்கமானவையாகும். இதன் விரிவு ஸ்ரீவசநபூ$_4$ஷணத்தில் காணத்தக்கது. மூன்றபசாரங்களேத் தாம் செய்வது தமக்கு வருத்தம் தருவதென்பதை ஹா, ஹந்த, ஹந்த என்று மூன்றிடைச் சொற்களால் குறித்தருளினர் என்க. ஆருவது ஸ்லோகத்திலுள்ள 'தத்$_3$வாரய' என்பதனே இப்பத்தாம் ஸ்லோகம் வரையில் கூட்டிப்பொருள் உரைக்கப்பட்டது. தொண்டரடிப் பொடிகள் திருமாலே முப்பத்திரண்டாம் பாசுரத்தில் 'மூர்க்கனேன் வந்து நின்றேன் மூர்க்கனேன் மூர்க்கனேனே' என்று மூன்று தடவைகள் தம்மைப் பற்றிக் குறிப்பிட்ட மூர்க்க$_2$ ஸப்$_3$த$_3$த்தை, இதில் மாமுனிகள் எட்டு ஒன்பது பத்தாம் ஸ்லோகங்களில் தம்மைப்பற்றிக் குறிப்பிட்டருளினர் என்பர் இதன் உரையாசிரியர்.

**पापे कृते यदि भवन्ति भयानुतापलज्जाः पुनः करणमस्य कथं घटेत ।**
**मोहन मे न भवतीह भयादिलेशः तस्मात् पुनः पुनरघं यतिराज! कुर्वे ।। (११)**

பாபே க்ருதே யதி$_3$ ப$_4$வந்தி ப$_4$யாநுதாப–
லஜ்ஜா: புந: கரணமஸ்ய கத$_2$ம் க$_4$டேத ।
மோஹேந மே ந ப$_4$வதீஹ ப$_4$யாதி$_3$லேஶ:
தஸ்மாத் புந: புநரக$_4$ம் யதிராஜ! குர்வே॥ (11)

பதவுரை:– ஹே யதிராஜ – வாரீர் யதிராஜரே, பாபே க்ருதே ஸதி – பாவம் செய்யப்பட்டபோது, மம – அடியேனுக்கு, ப$_4$ய அநுதாப லஜ்ஜா: – மேல் என்ன கேடு நேரிடுமோ என்னும் பயமும், ஐயோ தவறு செய்துவிட்டோமே என்னும் பச்சாத்தாபமும் (கழிவிரக்கமும்) பெரியோர்கள் முக$_2$த்தில் நாம் எப்படி விழிப்பதென்கிற வெட்கமும், ப$_4$வந்தி யதி$_3$ – உண்டாகுமேயானல், அஸ்ய புந: கரணம் – இப்பாபத்தை மறுபடியும் செய்வதென்பது, கத$_2$ம் க$_4$டேத – எப்படிப்பொருந்தும்? இஹ – இப்பாவம் செய்யும் விஷயத்தில், ப$_4$யாதி$_3$ லேஶ: (அபி) – ப$_4$யம் முதலிய மூன்றில் சிறிதளவு கூட, மோஹேந – அநுப$_4$விக்கத்தகாத நீச விஷயத்தில் இது அநுப$_4$விக்கத்தக்கதென்னும் திரிபுணர்ச்சியினுலே, மே – அடியேனுக்கு, ந ப$_4$வதி – உண்டாகிறதில்லே. தஸ்மாத் – அதனுல், அக$_4$ம் – பாவத்தை, புந: புந: – மறுபடியும் மறுபடியும், குர்வே – செய்துவருகிறேன்.

கருத்துரை:– ஐயா, ஶரணாக₃தனென்னும் பெயரை மட்டும் சுமந்தாலும் உமக்கு, பாபம் செய்தபிறகு ப₄யமும் வெட்கமும் உண்டானால் பாபத்தை மேலும் செய்யமாட்டீர். பச்சாதாபமுண்டானால் செய்த பாபமும் தீரும். இதற்கு நாம் என்ன செய்ய வேண்டியிருக்கிறது? என்று யதிராஜருக்குத் திருவுள்ளமாயிருக்கலாம் என்று ஊஹித்து அருளிச்செய்கிறார். அக₄ம் – பாபம். ப₄யம் முதலியவை பூர்ணமாக உண்டானால் மறுபடியும் பாபம் செய்வதற்கே இடமில்லை. அவை சிறிதே உண்டானால் எப்போதோ ஒரு தடவை செய்வது தவிர மேன்மேலும் செய்யவழியில்லை. அடியேனுக்கோ அவை சிறிதும் உண்டாகாமையினால் மேன்மேலும் இடையறாது அப்பாபத்தைச் செய்து கொண்டிருக்கிறேன். ஆகையால் அவை சிறிதும் உண்டாகாமைக்குக் காரணமாகிற மோஹத்தை – ஶப்₃த₃ாதி₃ நீச விஷயங்களில் 'இவை அநுப₄விக்கத்தக்கவை' என்கிற திரிபுணர்ச்சியை நீக்கியருள வேணுமென்று ப்ரார்த்தி₂ப்பது இந்த ஶ்லோகத்தின் உட்கருத்தாகும். அதனால் முற்கூறிய 'தத்₃வாரய' (அதை நீக்கியருளவேணும்) என்பதை இங்கும் வருவித்துக்கொள்ள வேணும்.

अन्तर्बहिस्सकलवस्तुषु सन्तमीशम् अन्धः पुरस्स्थितमिवाहमवीक्षमाणः।
कन्दर्पवश्यहृदयस्सततं भवामि हन्त त्वदग्रगमनस्य यतीन्द्र! नार्हः ।। (१२)

அந்தர்ப₃ஹிஸ்ஸகலவஸ்துஷு ஸந்தமீஶம்
அந்த₄:புரஸ்ஸ்தி₂தமிவாஹமவீக்ஷமாந:।
கந்த₃ர்பவஶ்யஹ்ருத₃யஸ்ஸததம் ப₄வாமி
ஹந்த த்வத₃க்₃ரக₃மநஸ்ய யதீந்த்₃ர! நார்ஹ:॥ (12)

பதவுரை:– ஹே யதீந்த்₃ர – வாரீர் யதிராஜரே, அஹம் – அடியேன், ஸகல வஸ்துஷு – எல்லாப்பொருள்களிலும், அந்த: ப₃ஹி: ச ஸந்தம் – உள்ளும் புறமும் பரந்திருந்து, ஈஶம் – எல்லாவற்றையும் அடக்கியாளுகிற ஸ்ரீமந் நாராயணனை, புர: ஸ்தி₂தம் – முன்னே நிற்கும் மனிதனை, அந்த₄: இவ – குருடன் போல், அவீக்ஷமாண: ஸந் – பாராதவனாய்க்கொண்டு, (அதனால்) கந்தர்ப்பவஶ்ய ஹ்ருத₃ய: – மந்மத₂னுக்கு (ஆசைக்கு)வஶப்பட்ட மனத்தையுடையவனாக, ஸததம் ப₄வாமி – எப்போதும் இருக்கிறேன். (ஆகையால்) த்வத் அக்₃ர க₃மநஸ்ய – தேவரீர் திருமுன்பே வருவதற்கு,(அஹம்) ந அர்ஹ: – அடியேன் தகுந்தவனாக இல்லை, ஹந்த – ஐயோ கஷ்டம்.

கருத்துரை:– 'ஐயா, அப்படியானால் நீர் நானிருக்குமிடத்திற்கு வாரும். அதற்கு ஆவன செய்கிறேன்' என்று யதிராஜருக்குத் திருவுள்ளமாயிருக்குமென்று கருதி தாம் அவரைக் கிட்டுவதற்கும் தமக்குத் தகுதியில்லாமையை இதனால் கூறுகிறார். 'வ்ருத்த்யா பஶு: – நர வபு: அஹம்' தாய்க்கும் மற்றவற்றிற்கும் வாசி தெரியாமல் செய்யும் செயலினால் விலங்காய், உடலால் மட்டும் மனிதனாக இருக்கிறேன் அடியேன் – என்ற கீழ் ஏழாம் ஶ்லோகத்தை விவரிப்பவராய் தாம் காமத்திற்கே வஶப்பட்ட மனமுடைமையைக் கூறித்

தமது நிலையை யதிராஜரிடம் விண்ணப்பிக்கிருரென்றபடி. யதிராஜர் என்று பெயர் படைத்துக் காமம் முதலியவற்றையடக்கிய பெரியோர்கட்கெல்லாம் தலைவராகிய எம்பெருமானுர் எதிரே வந்து நிற்பதற்கு, காமத்திற்கே பரவசப்பட்ட தமக்குத் தகுதியில்லாமையை இதனுல் விண்ணப்பித்தாரென்பது தேர்ந்த கருத்தாகும். காமத்தையே நினைக்கிற மனமுடைய அடியேன் தேவரீர் முன்பு வந்து நிற்பதை யெண்ணுத மனமுடையவனுகி, அங்ஙனம் முன்பு வந்து நிற்பதற்குத் தகுதியுடையவனல்லேன் என்றும் இங்ஙனம் நீசனுன அடியேன் தேவரீர் முன்பு வந்து நின்ருல் தேவரீர்க்கு மிகவும் அருவருப்பு உண்டாகுமாகையால் அப்படிவந்து நிற்பதற்கு அடியேன் தகுதி பெற்றிலேன் என்றும் கருத்துக் கூறுவர் அண்ணுவப்பங்கார் ஸ்வாமி.

तापत्रयीजनितदु:खनिपातिनोऽपि देहस्थितौ मम रुचिस्तु न तन्निवृत्तौ ।
एतस्य कारणमहो मम पापमेव नाथ! त्वमेव हर तद्यतिराज! शीघ्रम् ।। (१३)

தாபத்ரயீஜநிதது$_3$:க$_2$நிபாதிநோऽபி
தே$_3$ஹஸ்தி$_2$தௌ மம ருசிஸ்து ந தந்நிவ்ருத்தௌ।
ஏதஸ்ய காரணமஹோ மம பாபமேவ
நாத$_2$! த்வமேவ ஹர தத்$_3$யதிராஜ! ஶீக்$_4$ரம்॥ (13)

பதவுரை:– ஹே யதிராஜ – வாரீர் எதிகட்கிறைவரே, தாபத்ரயீ ஜநித து$_3$:க$_2$ நிபாதிநோऽபி – மூவகைத் தாபங்களினுல் உண்டாகப்பட்ட து$_3$க்க$_2$ங்களின் நடுவில் விழுந்து கொண்டேயிருந்த போதிலும், மம து – மிக நீசனுன அடியேனுக்கோவென்ருல், தே$_3$ஹ ஸ்தி$_2$தௌ (பருப்பதும் இளைப்பதுமாய் ஒருபடிப்பட்டு இராத) உடல் இப்படியே அழியாமல் நிலைத்து இருக்கும் நிலையில், ருசி: – ஆசையானது, ப$_4$வதி – உண்டாகிறது, தத் நிவ்ருத்தௌ – அந்த உடலின் அழிவில், ந ருசி: – வெறுப்பு, ப$_4$வதி – உண்டாகிறது. ஏதஸ்ய – உடல் அழியாமையில் விருப்பமும் அஃது அழிவதில் வெறுப்பும் உண்டாகிற இந்நிலைமைக்கு, காரணம்– காரணமானது, மம பாபமேவ – அடியேனுடைய பாபமே ஆகும். நாத$_2$ – ஸ்வாமீ!, த்வம் ஏவ – அடியேனுக்குத் தலைவரும், பாபம் போக்குமாற்றல் படைத்தவருமாகிற தேவரீரே, தத் – அப்பாவத்தை, ஶீக்ரம் – அடுத்த க்ஷணத்திலேயே, ஹர – போக்கியருளவேணும்.

கருத்துரை:– 'ஐயா, நீர் இதுவரையில் கூறிய குற்றங்களுக்கெல்லாம் காரணம், நீர் உம்முடைய உடல் நிலைத்திருப்பதில் வைத்திருக்கும் ஆசையேயாகும். அவ்வாசையை அவ்வுடலில் உள்ள நிலையாமை, பற்பல அழுக்குகள் நிறைந்துள்ளமை, நோய் பலவற்றிற்கும் இடமாக அமைந்திருக்கை முதலிய குற்றங்களை ஆராய்ந்தறிந்து அவ்வுடலை நீரே விட்டுவிடும்' என்று எதிராசர் கருதியிருக்கலாமென்று நினைத்து விண்ணப்பிக்கிருர் இதனுல். தாபத்ரயீ – மூன்று வகையான து$_3$க்க$_2$காரணங்கள், (1) ஆத்$_4$யாத்மிகம் – உடலைப்பற்றிவருகிற க$_3$ர்ப$_4$த்தில் வஸித்தல் முதலியன,

(2) ஆதி$_4$பௌ$_4$திகம் –பூ$_4$தங்களான நீர் நெருப்பு முதலியவற்ருலுண்டாகும் குளிர்ச்சி வெம்மை முதலியன. (3) ஆதி$_4$தை$_3$விகம் – தே$_3$வதையாகிய யமனுல் வரும் நரகயாதனே முதலியன. இவற்றை வேறுவகையாகவும் கூறுவதுண்டு. உடல் குற்றம் நிறைந்திருக்கிறதென்னும் விஷயத்தில் 'இந்த உடலுக்குள் இருக்கிற ரக்தம் மாம்ஸம் முதலியவை வெளியில் இருக்குமாகில் இவ்வுடல் பெற்றிருக்கும் மனிதன், அவற்றை உண்பதற்கு ஓடிவருகின்ற நாய் காகம் முதலியவற்றை, தடியை ஓங்கிக் கொண்டு சென்று விரட்டியடிப்பான்' என்று பொருள்படும் 'யதி$_3$ நாமாஸ்ய காயஸ்ய யத்$_3$ அந்த:, தத்$_3$ ப$_3$ஹிர் ப$_4$வேத்' என்னுமிந்த ஶ்லோகத்தை ப்ரமாணமாகக் கொள்க. 'தந்நிவ்ருத்தெள ந ருசி' என்றவிடத்தில் – பகைமைப் பொருளில் வரும் ந என்பதனே ருசி: என்பதனேடு சேர்த்து ருசிக்குப் பகையான த்வேஷம் (ஆசைக்கு விரோதியான வெறுப்பு) என்னும் கருத்து கொள்ளப்பட்டது. ஶப்$_3$த$_3$ாதி$_3$களே அநுப$_4$விப்பதில் உண்டாகும் ஆசையைக் காட்டிலும் உடல் நிலேத்திருப்பதில் உண்டான ஆசை மிகவும் கொடியதாகையால் அதற்குக் காரணமான பாபத்தை அடுத்த க்ஷணத்திலேயே போக்கியருளவேணுமென்ருர் இதனுல். இங்ஙனம் இவர் வேண்டிக்கொண்டபோதிலும், யதிராஜர் இவருடைய உடலேப் போக்காமலிருப்பதற்குக்காரணம், இவர் இன்னும் சில நாள்கள் இவ்வுலகில் உயிர் வாழ்ந்திருந்தால், இவர் வருந்தினுலும் இவரைக் கொண்டு உலகிலுள்ளவரை உய்யும்படி செய்யலாமென்ற ஆசையேயன்றி வேறில்லே என்று கொள்க.

वाचामगोचरमहागुणदेशिकाग्र्यकूराधिनाथकथिताखिलनैच्यपात्रम् ।
एषोहमेव न पुनर्जगतीदृशस्तद् रामानुजार्य करुणैव तु मद्गतिस्ते ।। (१४)

வாசாமகோ$_3$ாசரமஹாகு$_3$ணதே$_3$ஶிகாக்$_3$ர்ய–
கூராதி$_4$நாத$_2$கதி$_2$தாகி$_2$லநைச்யபாத்ரம்।
ஏஷோऽஹமேவ ந புநர்ஜக$_3$தீத்$_3$ருஶஸ்தத்$_3$
ராமாநுஜார்ய! கருணேவ து மத்$_3$க$_3$திஸ் தே॥ 14.

**பதவுரை:–** **ஹே ராமாநுஜார்ய**–வாரீர் ராமாநுஜாசார்யரே, **வாசாம் அகோ$_3$சர மஹா கு$_3$ண**– இத்தனே தானென்ற அளவில்லாமையால் வாய்கொண்டு வருணிக்கமுடியாதனவும், ஒவ்வொரு கு$_3$ணமே எவ்வளவு அநுப$_4$வித்தாலும் அநுப$_4$வித்து முடிக்கமுடியாத பெருமையை உடையனவுமாகிய நற்கு$_3$ணங்களேயுடைய, **தே$_3$ஶிகாக்$_3$ர்ய கூராதி$_4$நாத$_2$** – ஆசார்ய ஶ்ரேஷ்டராகிய கூரத்தாழ்வானுல், **கதி$_2$த** – தம்முடைய பஞ்சஸ்தவீ முதலியவற்றில் கூறப்பட்ட, **அகி$_2$ல நைச்ய பாத்ரம்** – எல்லாவித$_4$ நீசத்தன்மைக்கும் கொள்கலமானவன், **ஏஷ: அஹமேவ** – இந்த அடியேனெருவனே ஆவேன், **ஈத்$_3$ருஶ: புந:** – இத்தகைய மற்றெருவனேவென்னில், **ஜக$_3$தி** – உலகில், **ந** (அஸ்தி) – இல்லவேயில்லே, **தத்** – அக்காரணத்தினுல், **தேது** – கருணேபுரியும் விஷயத்தில் நிகரற்ற தேவரீருடைய, **கருணை ஏவ** – கருணேயே, **மத் க$_3$தி:** – (எல்லாரையும் விடக்குற்றவாளியான) அடியேனுக்கு உய்வு

பெறுவிக்கும் உபாயமாக, **ப4வதி** – ஆகிறது.

**கருத்துரை:–** இவ்வளவு தம்முடைய தே3ாஷங்களை விண்ணப்பித்த போதிலும், உள்ளவற்றில் சிறிதளவும் சொல்லப்பட்டதாகாதென்று நினைத்து, பூர்வாசார்யர்கள் தம்முடைய நூல்களில் தம்மிடமிருப்பதாகக் கூறிக்கொண்ட தே3ாஷங்கள் அனைத்தும் தம்மிடமேயுள்ளதாக விண்ணப்பிக்கிருர். கூரத்தாழ்வானுக்கு 'வாசாமகே3ாசரமஹாகு3ண' என்று விஶேஷணமிட்டருளியது – 'உண்மையில் அவர்தம்மிடம் எந்த தே3ாஷமுமில்லை' என்பதை நமக்கு அறிவிப்பதற்காகவே என்க. எந்த தே3ாஷமும் அவரிடத்தில் இல்லையேல் அவையத்தனையும் எங்குள்ளனவென்னில் – தம்மிடமே உள்ளதென்பதை 'அகிலநைச்ய பாத்ரம் அஹமேவ' என்று குறிப்பிட்டருளினர். தே3ஶிக–அக்3ர்ய– வேத3ாந்த ஶாஸ்த்ரத்தை ப்ரவசனம் செய்வதற்காகப் பட்டாபிஷேகம் செய்யப்பட்டவர்களில் தலைவர் கூரத்தாழ்வான் என்றபடி. 'ஆத்3யம் யதீ3ந்த்ரஶிஷ்யாணும் அக்3ர்யம் வேத3ாந்தவேதி3நாம்' (யதிராஜருடைய ஶிஷ்யர்களில் முதல்வரும், வேத3ாந்தமறிந்தவர்களில முக்2யமானவருமான கூரத்தாழ்வானை த்4யானிக்கிருேம்) என்ற ஶ்லோகம் நினைக்கத்தக்கது. கூரத்தாழ்வான் தமது ஸ்ரீவைகுண்ட2ஸ்தவத்தில் (84) 'ஸ்வாமீ எம்பெருமானே! ஐயோ ஐயோ நான் கெட்டேன், நான் மிகவும் துஷ்டன், மேலும் கெடுவன். நீசவிஷயங்களில் மிகவும் மோஹங்கொண்ட நான் ப4க3வானுன உன் விஷயத்தில் பற்றுடையவன் போல் வாயினல் என்னென்ன சொல்லிவிட்டேன். என்னைப் போன்ற பாபத்திரள், குற்றமின்றிக் குணம் நிறைந்த உன்னை நினைக்கவும் கூடத்தகுதிபெற்றதன்றே' என்று தொடங்கி தம்மிடமுள்ளதாக விண்ணப்பித்த குற்றங்களை இங்கு நினைத்தல் தகும்.

शुद्धात्मयामुनगुरूत्तमकूरनाथभट्टाख्यदेशिकवरोक्तसमस्तनैच्यम् ।
अद्यास्त्यसङ्कुचितमेव मयीह लोके तस्माद्यतीन्द्र! करुणैव तु मद्गतिस्ते ।।(१५)

ஶுத்3த4ாத்மயாமுநகு3ரூத்தமகூரநாத2–
ப4ட்டாக்2யதே3ஶிகவரோக்தஸமஸ்தநைச்யம்।
அத்3யாஸ்த்யஸங்குசிதமேவ மயீஹலோகே
தஸ்மாத்3யதீந்த்3ர! கருணைவ து மத்3க3திஸ்தே॥ (15)

**பதவுரை:–** **ஹே யதீந்த்3ர** – வாரீர் யதிராஜரே, **இஹ லோகே** – குற்றம் செய்தவர்கள் மலிந்த இந்தப் பூவுலகில், **அத்3ய** – கலிபுருஷன் தனியரசு செலுத்தும் இக்காலத்தில், **ஶுத்3த4ாத்மயாமுநகு3ரு உத்தம கூரநாத2 ப4ட்டாக்2ய தே3ஶிகவர** – குற்றங்களில் ஒன்றுமில்லாமையால் ஶுத்3த4மான ஆத்மஸ்வரூபத்தையுடையவர்களான யாமுநாசார்யரென்னும் ஆளவந்தாரென்ன, ஆத்மகு3ணங்கள் நிறைந்தவர்களில் மிகமிக உயர்ந்தவராகிய கூரத்தாழ்வானென்ன, பூர்வாசார்யர்கள் அனைவரைக் காட்டிலும் அதிகமான பெருமையை உடைய ஸ்ரீபராஶரப4ட்டரென்ன இவர்களால், **உக்த ஸமஸ்த நைச்யம்** – தங்களுடைய நூல்களில் தம்மிடமுள்ளதாகச் சொல்லப்பட்ட எல்லாவகையான

நீசதர்மங்களும் (குற்றங்களும்), **மயி ஏவ** – அடியேனிடத்திலேயே, **அஸங்குசிதம்** (அஸ்தி) – குறைவறப் பூர்ணமாக உள்ளன. (மற்றவரிடத்தில் குறைவாகவே உள்ளன) **தஸ்மாத்** – ஆகையால், **தே கருணா து** – உலகில் மிகவும் பெரியதாக ப்ரஸித்திபெற்ற தேவரீரது கருணையானது, **மத் க₃தி: ஏவ** (ப₄வதி) – அடியேனையே விஷயமாகக் கொண்டதாக ஆகிறது. (மிகப்பெரிய கருணைக்கு விஷயமாகக்கூடியவன் மிகப்பெருத்த பாபம் செய்த அடியேனொருவனேயன்றி, குறைந்த பாபம் செய்த மற்றவர் விஷயமாக இடமில்லை யென்றபடி.)

**கருத்துரை:**– ஆளவந்தார், கூரத்தாழ்வான், ஸ்ரீபராஶரப₄ட்டர் ஆகிய இம்மூவரும் ஶுத்₃த₄ாத்மாக்கள். ஆத்மாவுக்கு ஶுத்₃தி₄யாவது – தாம் தாம் தத்தமது நூல்களில் தம்மிடமுள்ளனவாகக் கூறிக்கொண்ட குற்றங்களில் ஒன்றுகூடத் தம்மிடமில்லாமையே ஆகும். ப₄ட்டர் – பராஶரப₄ட்டர், கூரத்தாழ்வானுடைய பெரியதிருக்குமாரருக்கு ஸ்ரீரங்க₃நாத₂னென்பது இயற்பெயர். அவரை ஸ்ரீரங்க₃நாத₂னாகிய பெரியபெருமாள் 'பராஶரப₄ட்டர்' என்று பலதடவைகள் அருள்பாடிட்டதனால் அவருக்கு பராஶரப₄ட்ட ரென்று ப்ரஸித்₃தி₄ ஏற்பட்டது. அவர் அப்படி அழைப்பதற்குக் காரணம் – விஷ்ணுபுராணத் தில் பராஶரமுனிவர் போல், 'பரம்பொருள் திருமாலே' என்று அறுதியிட்டுப் ப்ரசாரம் செய்ததேயாகும்.

'ஸமஸ்தநைச்யம் மயி ஏவ அஸங்குசிதம் அஸ்தி' என்று பதவுரையில் காட்டிய அந்வயமேயல்லாமல், 'ஸமஸ்தநைச்யம் மயி அஸங்குசிதமேவ அஸ்தி' என்று உள்ளபடியே அந்வயமும் கொள்ளலாம். எம்பெருமானார் மாமுனிகளிடம் 'நமது கருணைக்கு வயிறு மிகப்பெரியது. அதற்குக் குறைவான குற்றங்களால் நிறைவு உண்டாகாது. உம்மிடம் குற்றங்கள் பூர்ணமாக இல்லையே. ஆக நம்கருணைக்கு நீர் எப்படி இலக்காவீர்' என்று கேட்டதாகக்கொண்டு 'ஸ்வாமீ யதிராஜரே! உமது கருணையின் வயிறு நிறைவதற்கு வேண்டியவளவு குற்றங்கள் அடியேனிடம் அஸங்குசிதமாகவே – பூர்ணமாகவே உள்ளன. ஆகவே தேவரீருடைய கருணைக்கு அடியேன் விஷயமாகலாம்' என்ற கருத்து இவ்வந்வயத்தின்படி கொள்ளலாம். 'தே கருணா து மத்க₃திரேவ' என்று பதவுரையில் காட்டியபடியேயன்றி, 'தேது கருணைவ மத்க₃தி:' என்று உள்ளபடியே அந்வயமும் கொள்ளல் தகும். ஶாஸ்த்ரங்களில் கூறிய ஜ்ஞாநம், அநுஷ்ட₂ாநம், வைராக்₃யம் முதலிய தகுதிகளைப் பெற்றவர்களுக்கு அவற்றில் கூறப்பட்ட கர்மயோக₃ ஜ்ஞாநயோக₃ ப₄க்தியோக₃ங்கள் க₃தி (உபாயம்) ஆகலாம். நல்லதகுதிகளேதுமின்றியே குற்றங்களும் மலியப்பெற்ற அடியேனுக்கு தேவரீருடைய கருணையே க₃தி (உபாயம்) என்று கூறுதல் இவ்வந்வயத்தின் படி கருத்தாகக் கொள்க.

ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்நத்தில் (62) 'அடியேன் ஶாஸ்த்ரவரம்பை மீறினவன், மிகவும் நீசன், ஓரிடத்தில் நில்லாத சஞ்சலபு₃த்₃தி₄யுள்ளவன், பொறாமைக்குப் பிறப்பிடம், செய்ந்நன்றிகொன்றவன், துரஹங்காரமுடையவன், பிறரை வஞ்சிப்பவன், கொலையாளி, மிகவும் பாவி' என்றெல்லாம் தம்மிடமுள்ளனவாகக் கூறிய குற்றங்களும்.

கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் (59,60) 'எம்பெருமானே! ப4க3வத் பா4க3வத ஆசார்யாபசாரங்களிலிருந்து இன்றும் அடியேன் ஓய்ந்தபாடில்லை. இப்படிப் பாபியான அடியேன் கடக்கமுடியாத பெரிய அஜ்ஞாநக்கடலில் விழுந்து கிடக்கிறேன். வேறு புகலில்லாத அடியேன் உன் திருவடிகளைப் புகலாகப் பற்றுகிறேன். இப்படிப் பற்றினால் நீ கட்டாயமாக ரக்ஷிப்பாயென்கிற நம்பிக்கையும் அடியேனுக்கு இல்லை. அடியேன் 'உன் திருவடிகளைப் பற்றுகிறேன்' என்று முற்கூறிய ஶரணாக3திவார்த்தையின் பொருளிலும் அடியேனுக்கு ஶ்ரத்தை இல்லை' என்றிங்ஙனம் கூறிக்கொண்ட குற்றங்களும்,

ஸ்ரீபராஶரப4ட்டர் ஸ்ரீரங்க3ராஜஸ்தவ உத்தரஶதகத்தில் (89) 'அடியேனுக்கு, மோக்ஷோபாயமாகச் சொல்லப்பட்ட ஜ்ஞாநயோக3 கர்மயோக3 ப4க்தியோக3ங்களாகிய உபாயமேதுமில்லை. மோக்ஷம் பெறும் ஆசையுமில்லை. வேறுக3தியில்லாமை முதலிய தகுதிகளும் இல்லை. பாபங்கள் மட்டும் நிறையப்பெற்றவனாக உள்ளேன். மூர்க்க2த்தனத்தினால் ஶப்3த3ாதி3 விஷயங்களில் சென்று கலங்கிய நெஞ்சோடே 'நீயே ஶரணமாக வேணும்' என்று வார்த்தையை மட்டும் சொல்லுகிறேன்' என்றிங்ஙனம் பலவாறாகக் கூறிய குற்றங்களும் 'யாமுநகு3ருத்தம கூரநாத2 ப4ட்டாக்2ய தே3ஶிக வரோக்த ஸமஸ்த நைச்யம்' என்றதனால் கொள்க.

शब्दादिभोगविषया रुचिरस्मदीया नष्टा भवत्विह भवद्दयया यतीन्द्र! ।
त्वद्दासदासगणनाचरमावधौ यः तद्दासतैकरसताऽविरता ममास्तु ।। (१६)

ஶப்3த3ாதி3பே4ாக3விஷயா ருசிரஸ்மதீ3யா
நஷ்டா ப4வத்விஹ ப4வத்3த3யயா யதீந்த்3ர!।
த்வத்3தா3ஸதா3ஸக3ணநாசரமாவதௌ4 ய:
தத்3தா3ஸதைகரஸதாऽவிரதா மமாஸ்து।। 16.

**பதவுரை:– ஹே யதீந்த்3ர** – வாரீர் யதிராஜரே, **இஹ** – இந்த ஶரீரம் இருக்கும் நிலையிலேயே, **அஸ்மதீ3யா** – அடியேனுடையதான, **ஶப்3த3ாதி3 பே4ாக3 விஷயா** – நீசங்களான ஶப்3த3ம் முதலியவற்றாலுண்டான அநுப4வத்தைப்பற்றிய **ருசி:** – ஆசையானது, **ப4வத்3த3யயா** – தேவரீருடையதாய் அதி4கமான து3க்கத்தையே பற்றுக்கோடாகக்கொண்ட த3யையினால், **நஷ்டா ப4வது** – உருத்தெரியாதபடி காணாமல் போகுக, (மேலும்) **ய:**– எந்த பா4க்3யஶாலியானவன், **த்வத்3தா3ஸ** – விற்கவும் வாங்கவும் உரியவனாய் தேவரீர் இட்ட வழக்காயிருக்கும் அடியேனுடைய, **தா3ஸக3ணநா** – அடியவர்களை எண்ணும்போது, **சரமாவதௌ4** – அவ்வெண்ணிக்கையின் கடைசியான எல்லையில், **ப4வதி** – இருக்கிறானோ, **தத்3தா3ஸதா** – அவனைக் குறித்துச்செய்யும் அடிமையில், **ஏக ரஸதா** – (மற்றவற்றில் ஆசையோடு கலசாமல்) ஒன்றுபட்ட ஆசையானது, **அவிரதா** – நித்யமாக, **ப4வத்3த3யயா** – தேவரீருடைய த3யையினால், **மம அஸ்து** – அடியேனுக்கு உண்டாயிடுக.

**கருத்துரை:–** இதற்கு முன்புள்ள இரண்டு ஶ்லோகங்களாலே யதிராஜருடைய த₃யைக்குத் தாமொருவரே இலக்கென்பது திடப்படுத்தப்பட்டது. இனித் தமக்கு அவ்வெதிராஜர் தந்தருளவேண்டிய பயன்களைக் குறிப்பிடுகிறார் இந்த ஶ்லோகத்தினால். இதரமான நீச ஶப்₃த₃ாதி₃ விஷயங்களை அநுப₄விக்கவேணுமென்னும் ஆசை மாயவேணுமென்பதும், யதிராஜருடைய தொண்டர் தொண்டர் தொண்டரென்று தொண்டர் வரிசையில் யார் கடைசியில் இருக்கிறாரோ அவருக்குத் தொண்டு செய்யவேணுமென்ற ஒரே ஒரு ஆசை எப்போதும் உண்டாக வேணுமென்பதுமாகிய இவ்விரண்டு ப₂லன்களையும் முறையே இச்லோகத்தின் இரண்டு பகுதிகளாலும் வேண்டிக்கொண்டாராயிற்று. எம்பெருமானுடைய க்ருபை – யார் மிக அதிகமாகப் பாபம் செய்து அதனால் அதி₄கமான து₃க்க₂த்தை அநுப₄வித்துப் பரிதபிக்கிறார்களோ அவர்களிடம் செல்லாது. எம்பெருமானாருடைய க்ருபையோவெனில் அவர்களிடமே சென்று அவர்களைக் கரையேற்றும். அதனாலன்றோ ப₄க₃வான் எம்பெருமானானதும் ராமாநுஜர் எம்பெருமானாரானதும். எம்பெருமானைவிட உயர்ந்தவரென்பதனாலன்றோ மருமமறிந்த மஹாநுப₄ாவராகிய திருக்கோட்டியூர்நம்பிகள் தமது ஶிஷ்யராகிய ராமாநுஜரை எம்பெருமானார் என்றழைத்தருளியது. இவ்விருவகைப்பட்ட க்ருபைகளுக்கும் உள்ள வாசி 'ப₄வத்₃த₃யயா' (தேவரீருடைய க்ருபையாலே) என்றதனால் கருதப்பட்டது. ப₄க₃வானுடைய த₃யை அடியேனிடம் வேலைசெய்யாது. தேவரீருடைய த₃யையே அடியேனுக்கு உதவுவது என்பது இங்கு ஸாரம்.

श्रुत्यग्रवेद्यनिजदिव्यगुणस्वरूपः प्रत्यक्षतामुपगतस्त्विह रङ्गराजः।
वश्यस्सदा भवति ते यतिराज तस्माच्छक्तः स्वकीयजनपापविमोचने त्वम् ॥१७॥

ஶ்ருத்யக்₃ரவேத்₃யநிஜதி₃வ்யகு₃ணஸ்வரூப: ப்ரத்யக்ஷதாமுபக₃தஸ்த்விஹ ரங்க₃ராஜ:।
வஶ்யஸ்ஸத₃ா ப₄வதி தே யதிராஜ தஸ்மாச்ச₂க்த: ஸ்வகீயஜநபாபவிமோசநே த்வம்॥

**பதவுரை:** **ஹே யதிராஜ** – வாரீர் யதிராஜரே, **ஶ்ருத்யக்₃ரவேத்₃ய** – வேத₃ாந்தங்களின் வாயிலாக (ஆசார்யர்களிடமிருந்து) கேட்டுத் தெரிந்து கொள்வதற்குத் தக்கவைகளாகிய, **நிஜதி₃வ்யகு₃ணஸ்வரூப:** – தனக்கேயுரியவைகளாய், அநுப₄விக்கத்தக்க ஜ்ஞாநம், ஶக்தி முதலிய கு₃ணங்களென்ன, எல்லாரையும் உட்புகுந்து நியமிக்கும் தன்மை அல்லது தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்குப் பரதந்த்ரனாயிருக்கும் தன்மையாகிய ஸ்வரூபமென்ன இவற்றையுடையவனாய், **இஹ து** – இப்பூ₄மண்ட₃லத்திலோ என்னில், **ப்ரத்யக்ஷதாம் உபக₃த:** – எல்லாருடைய கண்களுக்கும் இலக்காயிருக்குந் தன்மையை அடைந்த, **ரங்க₃ராஜ:** – ஸ்ரீரங்கநாதன், **தே** – தேவரீருக்கு, **ஸத₃ா** – எப்போதும், **வஶ்ய:** – சொன்ன காரியத்தைத் தவறாமல் செய்யுமளவுக்கு வஶப்பட்டவனாய், **ப₄வதி** – தான் ஸத்தைபெற்றவனாகிறான். (தேவரீர் சொன்ன காரியத்தை நிறைவேற்றுவதனால் தான் தானிருப்பது பயனுடையதாகிற தென்று நினைக்கிறான்.) **தஸ்மாத்** – அவன் அப்படி வஶப்பட்டவனாக இருப்பதனால், **ஸ்வகீய** – தேவரீருடைய அடியவர்களின், **ஜந** – தாஸஜநங்களினுடைய, **பாபவிமோசநே** –

பாவத்தை விடுவிப்பதில், **த்வம்** – தேவரீர், **ஶக்த: ப$_{4}$வஸி** – ஆற்றல் படைத்தவராக ஆகிறீர்.

**கருத்துரை:** ஶப்$_{3}$த$_{3}$ாதி$_{3}$ விஷயாநுப$_{4}$வத்தில் ஆசையைப் போக்கடிப்பதும், இராமாநுசரடியார்களில் எல்லை நிலத்திலேயிருக்கிற அடியவர்க்கு அடிமை செய்வதொன்றிலேயே ஆசையைப் பிறப்பிப்பதுமாகிய முன் ஶ்லோகத்தில் கூறிய தமது காரியத்தைச் செய்வதற்கு உறுப்பாக இராமாநுசரிடமுள்ள த$_{3}$யையை அதற்கு முன்புள்ள இரண்டு ஶ்லோகங்களால் குறிப்பிட்டு, இந்த ஶ்லோகத்தினால் தமது காரியம் செய்வதற்குத் தக்க ஆற்றல் (ஶக்தி) அவரிடம் இருப்பதை ஸூசிக்கிறார். அர்ச்சாவதாரமான ஸ்ரீரங்க$_{3}$நாத$_{2}$ன் இப்பூ$_{4}$மியில் எல்லார் கண்களுக்கும் தென்பட்டுக்கொண்டிருக்கும் தன்மையின் வைலக்ஷண்யத்தை (சிறப்பை) 'உபக$_{3}$தஸ்து இஹ' என்றவிடத்திலுள்ள 'து' என்பதனால் காட்டுகிறார். பரத்வமும், வ்யூஹமும் (பரமபத$_{3}$நாத$_{2}$னும், க்ஷீராப்$_{3}$தி$_{4}$நாத$_{2}$னும்) மிகவும் தூ$_{3}$ரதே$_{3}$ஶத்திலுள்ளவர்களாகையாலே இங்குள்ள நம் கண்ணுக்கு இலக்காகார். இராமபிரான் கண்ணபிரான் முதலிய விப$_{4}$வாவதார மூர்த்திகள் முன்யுக$_{3}$ங்களில் (காலாந்தரத்தில்) இருந்தவர்களாகையால் பிற்காலத்தவரான நம்மால் காணமுடியாதவர்களாகிறார். அந்தர்யாமியான எம்பெருமானோ யோக$_{3}$ாப்$_{4}$யாஸம் செய்யும் யோகி$_{3}$களுக்கு மட்டுமே மனத்திற்கு விஷயமாகி நம் ஊனக்கண்களுக்கு இலக்காகமாட்டான். அர்ச்சாவதாரமான ஸ்ரீரங்க$_{3}$நாத$_{2}$ன் இந்த தே$_{3}$ஶத்தில், இந்தக்காலத்தில், யோக$_{3}$ம் செய்து ஶ்ரமப்படாமலேயே எல்லார்க்கும் ஊனக்கண்களுக்கு இலக்காகிறான் என்பதே அர்ச்சாவதாரத்தின் வைலக்ஷண்யமாகும். இப்படிப்பட்ட ஸ்ரீரங்க$_{3}$நாத$_{2}$ன் ராமாநுஜமுனிவரிட்டவழக்காக இருப்பதனால் அவனிடம் பரிந்துரைத்து அவனைக்கொண்டு நம்கார்யம் செய்து தலைக்கட்டுவரென்பது இந்த ஶ்லோகத்தின் கருத்து. கர்மயோக$_{3}$ம், ஜ்ஞாநயோக$_{3}$ம், ப$_{4}$க்தியோக$_{3}$ம், ப்ரபத்தியோக$_{3}$ம் என்ற மோக்ஷோபாயங்களைக் காட்டிலும் வேறுபட்டு ஐந்தாம் உபாயமான ஆசார்யனாகிய எம்பெருமானாருடைய உபாயத்வமானது – புருஷகாரத்வத்தின் எல்லைநிலமாந்தன்மையே என்பது நிஶ்சயிக்கப்பட்டதாகிறது. இந்த ஶ்லோகத்தினால் – என்று வ்யாக்$_{2}$யாதா அருளிச்செய்கிறார். பாபவிமோசநம் ஏற்படுமாகில் பரமபத$_{3}$த்தில் ப$_{4}$க$_{3}$வதநுப$_{4}$வகைங்கர்யங்கள் கிடைப்பது உறுதியாகையால் பாபவிமோசநம் மட்டுமே சொல்லப்பட்டது என்க. (17)

कालत्रयेऽपि करणत्रयनिर्मितातिपापक्रियस्य शरणं भगवत्क्षमैव।
सा च त्वयैव कमलारमणेऽर्थिता यत् क्षेमस्स एव हि यतीन्द्र! भवच्छ्रितानाम्।।१८।।

காலத்ரயேऽபி கரணத்ரயநிர்மிதாதிபாபக்ரியஸ்ய ஶரணம் ப$_{4}$க$_{3}$வத்க்ஷமைவ।
ஸா ச த்வயைவ கமலாரமணேऽர்த்தி$_{2}$தா யத் க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்$_{3}$ர! ப$_{4}$வச்ச்$_{2}$ரிதாநாம்।।

**பதவுரை:** **ஹே யதீந்த்$_{3}$ர** – வாரீர் யதிராஜரே, **காலத்ரயே அபி** – கழிந்த காலம், நிகழும் காலம், வருங்காலமாகிய முக்காலங்களிலும், **கரணத்ரயநிர்மித** – மனம்மொழி மெய்களென்கிற மூன்று கருவிகளாலும் செய்யப்பட்ட, **அதிபாபக்ரியஸ்ய** –

(எல்லாவற்றையும் பொறுக்கும் தன்மையையுடைய பகவானாலும் பொறுக்கமுடியாத வளவுக்கு) மிகவும் விஞ்சின பாவச்செயல்களைச் செய்யும் ஜீவாத்மாவுக்கு, **ஶரணம்** – பாவங்களைப்போக்கும் உபாயமானது, **ப$_4$க$_3$வத்க்ஷமைவ** – குற்றம் போக்குமவனுடைய குணங்களுக்கு இருப்பிடமான பகவானுடைய பொறுமையே ஆகும். அந்தப் பொறுமையோ எனில், **த்வயா ஏவ** –ப$_4$க$_3$வானையும் ஆணையிடும் ஆற்றல்படைத்த தேவரீராலேயே, **கமலா ரமணே** – கருணையே வடிவெடுத்தவளாய் ப$_4$க$_3$வானுடைய த$_3$யை பொறுமை முதலிய கு$_3$ணங்களை வெளிக்கிளப்புகிற ஸ்ரீரங்க$_3$நாச்சியாருடைய அழகியமணவாளனாகிய ஸ்ரீரங்க$_3$நாத$_2$னிடத்தில் **அர்த்தி$_2$தா இதி யத்** (ஶரணாக$_3$திக$_3$த்$_3$யத்தில்) ப்ரார்த்தி$_2$க்கப்பட்டதென்பது யாதொன்று உண்டோ, **ஸ ஏவ** – அந்த ப்ரார்த்த$_2$னையே, **ப$_4$வச்ச்$_2$ரிதாநாம்** – (தேவரீருடைய அபி$_4$மானத்திற்கு இலக்காக) தேவரீரால் கைக்கொள்ளப்பட்ட அடியார்களுக்கு, **க்ஷேம: ஹி** – உய்யும் உபாயமல்லவா?

**கருத்துரை:** கீழ்ஶ்லோகத்தில் ஸ்ரீரங்க$_3$நாத$_2$ன் யதிராஜருக்கு வஶப்பட்டவனென்றார். இந்த ஶ்லோகத்தில் அந்த ஸ்ரீரங்க$_3$நாத$_2$னை இன்று புதிதாக, அடியேனுடைய பாவத்தைப் போக்கும்படி தேவரீர் ப்ரார்த்தி$_2$க்கவேண்டாம். முன்பே க$_3$த்$_3$யம் விண்ணப்பிக்கும்போது 'மநோவாக்காயை:' என்று தொடங்கும் சூர்ணையாலே, 'க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்யமாணாந் ச ஸர்வாந் அஶேஷத: க்ஷமஸ்வ' (முன்பு செய்யப்பட்டவையும், இப்போது செய்யப்படு மவையும், இனிமேல் செய்யப்போமவையுமான எல்லாவிதமான அபசாரங்களையும் (பாவங்களையும்) ஒன்றையும் விடாமல் பொறுத்தருளவேணும்) என்று, அடியோங்களுடைய பாபங்களையும் பொறுத்தருளும்படி ப்ரார்த்தி$_2$த்தாய்விட்டதே. அந்த ப்ரார்த்த$_2$னையே போதாதோ அடியோங்களுக்கு உஜ்ஜீவநோபாயம் என்கிறார்.

(முன்பு எடுத்த க$_3$த்$_3$யவாக்யத்தில் தம்மைச் சேர்ந்தவர்களுடைய பாவத்தைப் பொறுக்கும்படி ப்ரார்த்தி$_2$த்தாரென்பது ஸ்பஷ்டமாக இல்லாவிட்டாலும், 'இமையோர் தலைவா! இந்நின்ற நீர்மை இனி யாமுறாமை, அடியேன் செய்யும் விண்ணப்பம் கேட்டருளாய்' என்று தாமும் தம்மைச் சேர்ந்தவர்களும், அறியாமையும், தீவினையும் பிறப்புமாய் ஓயாமல் நடந்து செல்கிற ஸம்ஸார ஸம்ப$_3$ந்த$_4$த்தை இனிமேல் அடையாமலிருப்பதற்காக, எல்லாருக்குமாகத் தாமொருவரே எம்பெருமானிடம் விண்ணப்பம் செய்த மாறனும் நம்மாழ்வாருடைய திருவடிகளைப் பணிந்து உய்ந்தவராகையாலும், உண்மையில் – பிறர்துன்பங்கண்டு பொறுமையென்னும் த$_3$யையை எம்பெருமானைக் காட்டிலும் அதி$_4$கமாகப் பெற்றுள்ளவராகையாலே, திருக்கோட்டியூர் நம்பிகள் தம்மைப் பதினெட்டுத் தடவைகள் நடக்கவைத்து மிகவும் வருத்தி உபதே$_3$ஶித்த சரமஶ்லோகார்த்த$_2$த்தை எந்த வருத்தத்தையும் கொடாமல் தம்மிடம் ஆசையோடு கேட்டவர்களுக்கு உபதே$_3$ஶித்த பெருமையை உடையவராகையாலும் யதிராஜர் தம்மைச் சேர்ந்தவர்களுடைய பாபத்தையும் பொறுக்கும்படி நிஶ்சயமாக ப்ரார்த்தி$_2$த்திருப்பரென்று நம்பியே 'க்ஷேமஸ்ஸஏவஹி யதீந்த்$_3$ர! ப$_4$வச்ச்$_2$ரிதாநாம்' (தேவரீர் ப்ரார்த்தி$_2$த்த ப்ரார்த்த$_2$னையே, தேவரீரை ஆஶ்ரயித்த

அடியோங்களுக்கும் உஜ்ஜீவநோபாயமாகும்) என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்தார் என்று கொள்ளல்தகும். இக்கத்$_3$யவாக்யத்தில் ''மம(அபசாராந்)' என்று இல்லாததனுலும், எல்லாருடைய அபசாரங்களையும் பொறுக்கும்படி ப்ரார்த்தி$_2$த்ததாகக் கொள்ளுதல் பொருந்தும்.)

श्रीमन्यतीन्द्र! तव दिव्यपदाब्जसेवां श्रीशैलनाथकरुणापरिणामदत्ताम्।
तामन्वहं मम विवर्धय नाथ! तस्या: कामं विरुद्धमखिलञ्च निवर्तय त्वम् ।।१९।।

ஸ்ரீமந்யதீந்த்ர! தவ தி$_3$வ்யபத$_3$ாப்$_3$ஜஸேவாம் ஸ்ரீஸைலநாத$_2$கருணாபரிணாமத$_3$த்தாம்।
தாமந்வஹம் மம விவர்த்த$_4$ய நாத$_2$! தஸ்யா: காமம் விருத்$_3$த$_4$மகி$_2$லஞ்ச நிவர்த்தய த்வம் (19)

**பதவுரை: ஸ்ரீமந்யதீந்த்$_3$ர** – தம்முடைய ஆசார்யர்களோடு தம்முடைய ஶிஷ்யர்களோடு வாசியற மோக்ஷமளிக்கையாகிற என்றுமழியாத செல்வமுடைய யதிராஜரே, **த்வம்** – தேவரீர், **மே** – அடியேனுக்கு, **ஸ்ரீஸைலநாத$_2$ கருணாபரிணாம த$_3$த்தாம்** – அடியேனுடைய ஆசார்யராகிய திருமலையாழ்வாரென்னும் திருவாய்மொழிப்பிள்ளையின் மிக்க கருணையினுலே தரப்பட்ட, **தாம்** – மிகச்சிறந்த, **தவ தி$_3$வ்யபத$_3$ாப்$_3$ஜ ஸேவாம்** – தேவரீருடைய திருவடித்தாமரைகளில் பண்ணும் கைங்கர்யத்தை, **அந்வஹம்** – நாடோறும், **விவர்த்த$_4$ய** – விஶேஷமாக வளர்த்தருளவேணும், (அதாவது தேவரீரடியார் பரம்பரையில் கடைசிவரையில் அக்கைங்கர்யம் அடியேன் செய்யும்படி அதை வ்ருத்$_3$தி$_4$செய்விக்க வேணுமென்றபடி) **நாத$_2$** – ஸ்வாமியான யதிராஜரே, **தஸ்யா:**– அத்தகைய கைங்கர்யத்துக்கு, **விருத்$_3$த$_4$ம் –** தடையாகிய, **அகி$_2$லம்** – எல்லாவற்றையும், **காமம் நிவர்த்தய** – அடியோடு போக்கியருளவேணும்.

**கருத்துரை:** கீழ் 'வாசா யதீந்த்$_3$ர' (3) என்ற ஶ்லோகத்திலும், 'நித்யம் யதீந்த்$_3$ர' (4) என்ற ஶ்லோகத்திலும் தொடங்கிய – முறையே யதிராஜருடைய அடியார்களுக்குச் செய்யும் கைங்கர்யத்தையும் யதிராஜருக்குச் செய்யும் கைங்கர்யத்தையும் இதில் ப்ரார்த்தி$_2$த்து முடிக்கிருர். 'ஸேவாம் வர்த்$_3$த$_4$ய' – என்றதனுல் யதிராஜ ஸேவையின் வளர்ச்சியையும், 'விவர்த்$_3$த$_4$ய' என்றவிடத்தில் 'வி' என்னும் உபஸர்க்கத்$_3$தாலே யதிராஜருடைய அடியார் ஸேவையின் வளர்ச்சியையும் ப்ரார்த்தி$_2$த்தாரென்றபடி. இதனுல் தாம் செய்யும் கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளுதலால் யதிராஜரே ப்ராப்யர் என்பதும், அக்கைங்கர்யத்துக்குத் தடையைப் போக்கி அதனைத் தந்து வளர்த்தலால் அவரே ப்ராபகர் என்றும் பெறப்பட்டதாயிற்று. திருவாய்மொழிப்பிள்ளைக்கு யதிராஜரோடு ஸம்ப$_3$ந்த$_4$த்தை உண்டாக்கிக் கொடுத்த உபகாரத்வமாத்ரமேயாகும். யதிராஜ கைங்கர்யத்துக்குத் தடையாவன – இஹலோக பரலோக ஸுக$_2$ாநுப$_4$வமும், ஆத்மாநுப$_4$வமாகிய கைவல்யமும், யதிராஜருடைய உகப்புக்காக வல்லாமல் தன்னுகப்புக்காகச் செய்யும் ப$_4$க$_3$வத்கைங்கர்யமும் முதலியனவாகும்.

विज्ञापनं यदिदमद्य तु मामकीनम् अङ्गीकुरुष्व यतिराज! दयाम्बुराशे!।
अज्ञोऽयमात्मगुणलेशविवर्जितश्च तस्मादनन्यशरणो भवतीति मत्वा।।२०।।

விஜ்ஞாபநம் யதி₃த₃மத்₃ய து மாமகீநம் அங்கீ₃குருஷ்வ யதிராஜ! த₃யாம்பு₃ராஶே।
அஜ்ஞோऽயமாத்மகு₃ணலேஶவிவர்ஜிதஶ்ச தஸ்மாத₃நந்ய ஶரணோ ப₄வதீதி மத்வா॥

பதவுரை: த₃யா அம்பு₃ராஶே – பிறர்துன்பம் கண்டு பொறுமையென்னும் த₃யைக்குக் கடல்போன்ற, யதிராஜ – யதிராஜரே, அத்₃ய – இப்போது, மாமகீநம் – அடியேனுடையதான, யத்₃விஜ்ஞாபநம் – 'வாசாயதீந்த்ர' (3) என்று தொடங்கி முன் ஶ்லோகம் வரையில் செய்யப் பட்ட விண்ணப்பம் யாதொன்றுண்டோ, இத₃ம் – இந்த விண்ணப்பத்தை, 'அஜ்ஞ அயம் – நல்லறிவு இல்லாதவன் இவன், ஆத்மகு₃ணலேஶ விவர்ஜிதஶ் ச – மேலும் மனவடக்கம், பொறியடக்கம் முதலிய ஆத்மகு₃ணங்கள் சிறிதுமில்லாதவன், தஸ்மாத் – ஆகையால், அநந்ய ஶரண: ப₄வதி – நம்மைத்தவிர வேறொரு உபாயமில்லாதவனாக இருக்கிறான்' இதி மத்வா – என்று நினைத்தருளி, அங்கீ₃குருஷ்வ – ஏற்றுக்கொண்டருளவேணும்.

இதுவரையில் தாம் செய்த விண்ணப்பத்தையேற்றுக் கொள்ளுதற்குக் காரணமாகத் தம்மிடமுள்ள யதிராஜரைக் தவிர வேறொரு உபாயமில்லாமையாகிற அநந்ய ஶரணத்வத்தைச் சொல்லி முடிக்கிறார். இதனால் தயாம்புராஶே – தயையாகிற நீர்வற்றாத கடலே என்றபடி. இதனால் யதிராஜருடைய த₃யை ஒரு காரணத்தினால் உண்டாகாமல் நிர்ஹேதுகமாய் நித்யமானது என்று கொள்ளத்தக்கது. 'த₃யைகஸிந்தோ₄' (6), 'ராமாநுஜார்ய கருணைவ து' (14), 'யதீந்த்ர கருணைவ து' (15), 'ப₄வத்₃த₃யயா' (16), 'கருணாபரிணாம' (19), 'த₃யாம்பு₃ராஶே' (20) என்று த₃யையை அடுத்தடுத்துப் பலதடவைகள் ப்ரஸ்தாவித்த படியினால், ராமாநுஜர் 'க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்' (பிறகாரணங்களின்றி, இயற்கையாகத் தமக்கேற்பட்டுள்ள த₃யைமாத்ரத்தாலே மனம் தெளிந்து உபதே₃ஶித்து உய்வு பெறுவிக்கும் ஆசார்யர்) என்பது சொல்லப்பட்டதாயிற்று.

இந்த யதிராஜ விம்ஶதியின் முதல் ஶ்லோகத்திலுள்ள 'ஸ்ரீமாத₄வாங்க்₃ரிஜலஜத்₃வய நித்யஸேவா ப்ரேமாவிலாஶய பராங்குஶபாத₃ப₄க்தம்' என்பதனால், இராமாநுச நூற்றந்தாதியில் முதற்பாட்டிலுள்ள 'பூமன்னுமாதுபொருந்தியமார்பன் புகழ்மலிந்த பாமன்னுமாறனடியணிந்துய்ந்தவன்... இராமாநுசன்' என்ற பகுதி நினைவு படுத்தப் பெற்றதும், இங்கு இக்கடைசியான ஶ்லோகத்திற்கு முன்புள்ள ஶ்லோகத்தில் உள்ள 'ஸ்ரீமந் யதீந்த்₃ர தவ தி₃வ்ய பதா₃ப்₃ஜஸேவாம் விவர்த்₃த₄ய' (ராமாநுஜமுனிவரே! தேவரீர் திருவடித்தாமரைகளில் அடியேன் செய்யும் கைங்கர்யத்தை தேவரீரடியார்களின் கைங்கர்ய பர்யந்தமாக வளர்த்தருளவேணும்). என்பதனால், இராமாநுசநூற்றந்தாதியில் கடைசியான பாசுரத்திற்கு முன் பாசுரத்திலுள்ள 'இராமாநுச! உன்தொண்டர்க்கே அன்புற்றிருக்கும்படி என்னையாக்கி அங்காட்படுத்து' என்ற பகுதி நினைவுபடுத்துப்பட்டதும் கவனிக்கத்தக்கது. ஆக, யதிராஜர் இராமாநுச நூற்றந்தாதியை நேரே கேட்டு ஆனந்தமடைந்தாப்போலே இந்த யதிராஜவிம்ஶதியையும் நாம் சொல்லக்கேட்டு, ஆநந்தப்படுவரென்பதில்

